உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி.

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 18 | ஆங்கீரஸஹு ஐப்பசிமீ கஉ | பகுதி 4
1932ஹு அக்டோபர்மீ 17உ

## கடவுள் வணக்கம்.

போதமா யாதிநடு வந்தமுமி லாததாய்ப்
புனிதமா யவிகா ரமாய்ப்
போக்குவர வியலாத இன்பமாய் நின்றநின்
பூரணம் புகலி டமதா
ஆதரவு வையாமல் அறிவினை மறைப்பதுநின்
அருள் பின்னும் அறிவின்மைதீர்த்து
அறிவித்து நிற்பதுநின் அருளாகில் எளியனேற்கு
அறிவாவ தேத றிவிலா
ஏதம்வரு வகையேது வினையேது வினைதனக்கு
ஈடான காய மேதென்
இச்சாசு தந்தரஞ் சிறிதுமிலை இகபரம்
இரண்டினுள் மலைவு தீரத்
தீதிலருள் கொண்டினி யுணர்த்தியெனை யாள்வையோ
சித்தாந்த முத்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிண மூர்த்தியே
சின்மயா னந்த குருவே. (1)

---

கல்லை யுற்ற கருத்தினர் கார்நிறத்து
அல்லை யொத்த குழலினர் ஆசையால்
எல்லை யற்ற மயல்கொள வோவெழில்
தில்லை யிற்றிக ழுந்திருப் பாதனே. (2)

---

சத்தமுத லாம்புலனிற் சஞ்சரித்த கள்வரெனும்
பித்தர் பயந் தீர்ந்து பிழைக்குநா ளெந்நாளோ. (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் திருவருள் கூர்ந்து ஆட்கொள்வையோ என்று சின்மயானந்த குருவை வேண்டுகின்றார்.

(இ-ள்) ஞானவடிவாகியும் ஆதியந்த ரகிதமாகியும், பரிசுத்தமாகியும், நிர்விகாரமாகியும், போக்குவரவற்ற சுகவடிவாகியும் நின்ற நினது பூரண நிலையையே புகலிடமாகக் கொண்டு அதனிடம் விருப்பம் வைக்காத வகையில் எனது அறிவைத் தடை செய்வதும் உன் திருவருளே. மேலும், அறியாமையை நீக்கி, என்னுள்ளிருந்து உணர்த்தி நிற்பதும் உன் திருவருளே. ஆனால் எளியேனுக்கு அறிவாவது யாது? அறிவில்லாத குற்றம் உண்டாகும் வகை யாது? அறிவு அறியாமைகட்குக் காரணமான வினை யாது? என்னுடைய இச்சா சுதந்தரங்கள் கொஞ்சமும் இல்லை. இகபரம் என்னும் இரண்டிடத்தும் எனது மயக்கந் தீரும்படியாகக் குற்றமற்ற திருவருளைக் கொண்டு இனியேனும் அறிவுறுத்தி என்னை அடிமை கொள்வையோ? சித்தாந்த முத்தி முதலே ! திருச்சிரகிரியின் கண் ஆன்மாக்கள் பிரகாசிக்க எழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியே! ஞானனந்தங்களைக் கொடுக்கின்ற சதா சாரியனே! என்க.

முதல்வனுடைய சொரூப விலக்கணம் இன்னபடித் தெனக்கூற முடியாமையின் "போதமா யாதி நடுவந்தமு மில்லாததாய்ப் புனிதமாய விகாரமாய்ப் போக்குவர வில்லாத வின்பமாய் நின்றநின் பூரணம்" என்றார். கன்ம சாமீபமான ஆன்மாக்களுக்குப் பரிபாகமான மலங்களினுடைய வீரியத்தைத் தடுத்தலும், ஆன்மாக்களுக்கு ஆணவ முதலிய குற்றங்களைப் போக்கி ஞானத்தினைக் கொடுத்து வீட்டை யடையச் செய்தலும் இறைவன் அருளே யாகையால் "அறிவினை மறைப்பது நின்னருள் பின்னு மறிவின்மை தீர்த்தறிவித்து நிற்பது நினருளாகில்" என்றார். ஆன்மா ஒன்றை அறியுமிடத்துத் தானே அறியாமல் அறிவிக்க அறியும் தன்மையுடைத் தாகலின் "இச்சாசுதந்தரஞ் சிறிது மிலை" என்றார்.

2. இதனால் பெண்ணாசையை நீக்கியருள வேண்டும் என்கிறார்.

(இ-ள்) அழகிய சிதம்பரத்தில் பிரகாசிக்கின்ற திருவடிகளை யுடைய இறைவனே ! கல்லின் தன்மை பொருந்திய மனத்தை யுடையவர்களும், கரிய இருளையொத்த கூந்தலை யுடையவர்களுமாகிய மாதராசையால் அளவு கடந்த மயக்கங் கொண்டு நசிக்கவோ அடியேன் பிறந்தது என்க.

மாதர்களின் மயலிற்சிக்குண்டோர் நல்லறிவிற் றலை யெடார் என்பார் "குழலினராசையால் எல்லையற்ற மயல் கொளவோ" என்றார்.

3. (இ-ள்) சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தமென்னும் புலன்களில் தங்கிய கள்ளப் பித்தர்களின் பயத்தினின்று நீங்கி உய்யுநாள் எந்நாளோ என்க.






# காந்தியடிகளின் வெற்றி.



பாரதத் தாயின் அரும்பெரும் புதல்வர் மகாத்மா காந்தியடிகளின் கடுந்தவம் பலித்துவிட்டது. சென்ற செப்டம்பர் மாதம் 20-ம் தேதிமுதல் ஏழு கோடி ஏழைத் தீண்டாத மக்களின் விடுதலைக்காகக் காந்தியடிகள் எரவாடாச் சிறையில் உண்ணாவிரத மேற்கொண்டு, உயிர் துறக்கத் துணிந்து, வெற்றிபெற்றார். நமது உலகம் போற்றும் உத்தமர் திடும்பிரவேசமாக இத்தகைய கடுந்தவம் மேற்கொள்ளத் துணிந்தார் இல்லை. வகுப்புப் பிரச்சினையின் ஒரு அம்சத்தைப்பற்றி இந்திய மந்திரிக்கும் முதன்மந்திரி ராம்ஸே மாக்டனால்டுக்கும் காந்தியடிகள் நிருபந் தீட்டினார். அவர்கள் திருப்திகரமான விடை கொடுக்கவில்லை. அதன் பின்னரே நமது பொறுமைக் கடல் உண்ணாவிரதம் மேற்கொள்ளத் துணிந்தார். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வகுப்புப் பிரச்சினையைப் பற்றித் தங்கள் தீர்ப்பை விரைவில் வெளியிடுவார்கள் என்ற செய்திகளைப் பத்திரிகைகளிற் கண்டவுடன் காந்தியடிகள் சென்ற மார்ச்சு மாதம் 11-ம் தேதியே இந்திய மந்திரி ஸர். சாமுயல் ஹோருக்குக் கடிதம் எழுதினார். அதில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதி முறை அமைத்து ஹிந்து சமூகத்தைப் பிளவு செய்தால் தாம் பட்டினிகிடந்து சாகத் துணிந்திருப்பதாக அறிவித்திருந்தார். இந்திய மந்திரியார் ஏதேதோ காரணங்காட்டித் திருப்தியான பதில் கொடுக்காமல் மழுப்பிவிட்டார். பின்னர் காந்தியடிகளின் எச்சரிக்கையை லக்ஷியம்செய்யாமல் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வகுப்புப் பிரச்சினைத் தீர்ப்பை வெளியிட்டுவிட்டனர். அதன்பின் நமது அடிகள் மீண்டும் முதன் மந்திரிக்கு நிருபம் விடுத்தார். அதில் தாம் முன்னர் நிருபம் வரைந்திருந்ததை நினைவூட்டியதோடு அரசாங்கத்தார் செய்துள்ள வகுப்புத் தீர்ப்புக்குத் தாம் எக்காரணங் கொண்டும் இணங்க முடி

யாது என்றும், அவர்கள் அத்தீர்ப்பில் கண்ட தாழ்த்தப்பட்ட மக்களின் தனித்தொகுதி முறையை மாற்றுவிட்டால் செப்டம்பர் மாதம் 20-ம் தேதி முதல் உண்ணாவிரதமிருந்து உயிர் துறக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும் என்றும் குறிப்பிட்டிருந்தார். முதன் மந்திரி மாக்டனால்டு அவர்களும் அரசாங்கத் தீர்ப்பே சரியானது என்று காந்தியடிகட்கு விடை கொடுத்துவிட்டார். நமது அஹிம்ஸா தருமமூர்த்தி தமது சூளுரைப்படியே சென்ற மாதம் 20-ந் தேதி முதல் பட்டினி கிடக்கத் துணிந்தார். அன்று முதல் உலக மக்களின் கவனம் எரவாடாச் சிறையில் பதிந்திருந்தது. பாரத மக்களின் மனங்கள் ஏங்கித் துடிதுடித்துக் கொண்டிருந்தன. சிலர் காந்தியடிகளைப் பின்பற்றித் தங்கள் ஆருயிர் வழங்கவும் முற்பட்டுவிட்டனர். வைதிகப் பிடிவாதமாகிய கற்பாறையைக் காந்தியடிகளின் கடுந்தவ பீரங்கி தகர்த்தெறிந்துவிட்டதென்றே கூறவேண்டும். பாரத நாட்டில் பல ஆலயங்கள் "தீண்டாதா"ருக்காகத் திறந்துவிடப்பட்டன. வைதிகப் பிராமணர் "தீண்டாத" மக்கட்குப் புரோகிதம் செய்யவும் ஒப்புக்கொண்டனர்.

காந்தியடிகள் உயிர்விடத் துணிந்தார் என்ற செய்தி எல்லாத் தலைவர்களையும் கவலைக் கடலுள் மூழ்கச் செய்தது. எல்லாரும் பம்பாயில் வந்து திரண்டனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வெளியிட்ட வகுப்புத் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட மக்கட்கு வழங்கியுள்ள தனித்தொகுதி முறையை மாற்றச் செய்து நமது புனித மூர்த்தியின் ஆருயிரைக் காக்கவேண்டும் என்று தலைவர்கள் அல்லும் பகலும் முயன்றனர். இதற்காகப் பண்டித மதன் மோஹன் மாளவியாவின் தலைமையின் கீழ்ச் சமரஸ அவசர மகாநாடு கூட்டப்பட்டது. இக்கூட்டத்தில் மிதவாதிகள் முதலிய பல்வேறு கொள்கையினரும் பங்கெடுத்துக்கொண்டனர். "தாழ்த்தப்பட்ட மக்கட்குத் தனித்தொகுதி முறையே வேண்டும். அதுதான் அவர்களை உய்விக்கும் உத்தம சஞ்சீவி" என்று வட்டமேஜை மகாநாட்டில் வீரமுழக்கம் செய்த டாக்டர் அம்பெத்காரும் அவருடைய கோஷ்டியாரும் அம்மகாநாட்டில் கலந்து கொள்ளுமாறு வற்புறுத்தி வேண்டிக்கொள்ளப்பட்டனர். டாக்டர் அம்பெத்கார் இறுதிவரை உறுதி யாகவே நின்று போராடினர். கடைசியில் காந்தியடிகளின் ஆன்மசக்தி எல்லாரும் ஒப்புக்கொள்ளத்தக்க நன்முடிவை — உடன்படிக்கையை உண்டாக்கி விட்டது. எல்லாத் தலைவர்களும் உடன்படிக்கையில் கையெழுத்திட்டுவிட்டார்கள் என்ற செய்தி வெளி வந்தவுடன் நாட்டுமக்கள் அடைந்த மகிழ்ச்சிப் பெருக்குக்கு ஒரு எல்லையும் உண்டோ? தாழ்த்தப்பட்ட மக்களின் உரிமை விஷயத்தில் தாம் உண்மை என்று நம்பிய கொள்கையை நிலைநாட்ட, உறுதியுடன் போராடி, முடிவில் பெரும்பாலோர் கருத்திற் கிணங்கிய வீரர் அம்பெத்காரை நாம் பெரிதும் வாழ்த்துகின்றோம். காந்தியடிகளும் அம்பெத்காரை வாழ்த்திப் பாராட்டியது குறிப்பிடத்தக்கது.

புனாவில் ஏற்பட்ட ஒப்புயர்வற்ற சமாஸ உடன்படிக்கையை ஏற்றுக்கொண்டு, தாழ்த்தப்பட்டவர்களின் தனித்தொகுதி முறையை நீக்கிவிட வேண்டும் என்று பிரிட்டிஷ் அரசாங்க முதன்மந்திரி ராம்ஸே மாக்டனால்டு அவர்கட்குத் தந்திமேல் தந்தி பறந்தன. மாகாண அரசாங்கங்களும் இந்திய அரசாங்கமும் இவ்விஷயத்தில் தீவிர சிரத்தை காட்டியது குறிப்பிடத்தக்கது. இந்திய மந்திரியும் பிரிட்டிஷ் முதன்மந்திரியும் இந்நாட்டு மக்களின் உணர்ச்சியையும் வேட்கையையும் மதித்துச் சிறிதும் தாமதம் இன்றி, புனா உடன் படிக்கையை ஆராய்ந்து அங்கீகரித்தது பாராட்டத் தக்கதாகும். இத் தச் சந்தர்ப்பத்திலேனும் தங்கள் பொறுப்புணர்ந்து நடந்துகொண்ட பிரிடிஷ் அரசாங்கத்தாருக்கு நாம் வாழ்த்துக் கூறுகின்றோம். நமது நாட்டு "உயர் வகுப்பு" ஹிந்துத் தலைவர்களின் பெருமுயற்சியும், தாழ்த்தப்பட்ட வகுப்புத் தலைவர்களின் பரந்த நோக்கமும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாரின் பிடிவாதமற்ற பேரறிவும் ஒன்று கூடி நமது மாபெரும் தியாகவள்ளலின் ஆருயிரைக் காப்பாற்றி யிருக்கின்றன. காந்தியடிகள் வாழ்க வாழ்க என்று பல்லாண்டு கூறுகின்றோம்.

தாழ்த்தப்பட்ட மக்கட்கு வழங்கப்பட்ட தனித்தொகுதிக் கொடுமையை நீக்கத் தமது ஆருயிர் வழங்கலே தகுதி என்று காந்தியடிகள் உறுதி பூண்டார். தாழ்த்தப்பட்ட மக்கள் சமூகத் துறையில் சாசுவதமாகப் பிரிக்கப்பட்டிருப்பது போலவே அரசியல் துறையிலும் பிரிக்கப்பட்டதைக்கண்டு நமது அஹிம்ஸா தருமமூர்த்தியின் மனம் பிளந்து விட்டது. எனவே உயிர் வழங்கியேனும் அப்பிரிவினையை எதிர்க்கவேண்டும் என்று தீர்மானித்தார். சிறையிற் கிடந்த நிலைமையிலும் காந்தியடிகள் இத்தகைய வஞ்சினம் மேற்கொண்டது உலகை வியப்புக் கடலில் மூழ்கச் செய்தது. ஜடநாகரிகச் சேற்றில் அழுந்திக் கிடக்கும் இந்நவீன உலகில், ஆன்மசக்தியின் பெருமையை நிலைநாட்டிய தீரம் மகாத்மா காந்தியடிகட்கே உரிமையாகும். இனிமேலேனும் காந்தியடிகள் இன்றி இந்திய அரசியல் அமைப்பு நிறைவேறாது என்னும் உண்மையைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் உணர்ந்து கொள்ளுவார்களா?

புனா உடன்படிக்கையைப் பாரத மக்களின் முழுச் சம்மதம் பெற்ற உடன்படிக்கை என்றே கூறவேண்டும். இதைப்பற்றிக் குறை கூறத் துணிவோர் உலகம் அறியாதவரே. டில்லியில் கூடிய ஹிந்து மகாசபை மகாநாட்டிலும், உடன்படிக்கை ஏற்பட்ட மறுநாள் பம்பாயில் கூடிய மாபெருங் கூட்டத்திலும் அவ்வுடன்படிக்கை ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. புனா உடன்படிக்கையானது, தனித்தொகுதி வேண்டிய டாக்டர் அம்பெத்கார் வேட்கையையும், கூட்டுத் தொகுதி வேண்டிய எம். சி. ராஜாவின் ஆசையையும், ஒன்றுபிருக்க வேண்டும் பிரிவினை கூடாது என்ற காந்தியடிகளின் விருப்பத்தை

யும் நிறைவேற்றிவைக்கும் தனிப்பெரும் சிறப்பு வாய்ந்ததாக விளங்குகின்றது. இவ்வுயரிய உடன்படிக்கையானது தாழ்த்தப்பட்ட வகுப்பாருக்குப் பிரிட்டிஷ் அரசாங்கம் வழங்கிய பிரதிநிதித்துவத்தைவிட அதிகமான பிரதிநிதித்துவத்தை அளிக்கிறது. லோதியன் கமிட்டி சிபார்சு செய்துள்ளபடியே தாழ்த்தப்பட்ட வகுப்பாரில் வயது வந்தவர்கட்கெல்லாம் வாக்குரிமை வழங்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. புனா உடன்படிகையின்படி பொதுத்தொகுதியில் தாழ்த்தப்பட்ட வகுப்பு அபேக்ஷகர்களாகப் போட்டிபோடுவோர் தாழ்த்தப்பட்ட வகுப்பு வாக்காளராலேயே முன்னதாக நான்கு பேர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். இந்நால்வரில் ஒருவரே எல்லா வாக்காளர்களாலும் தேர்ந்தெடுக்கப்படுவர். இவ்வேற்பாட்டில் தாழ்த்தப்பட்ட மக்கட்கும் "உயர் வகுப்பு" ஹிந்துக்கட்கும் பரஸ்பர சம்பந்தமும் பொறுப்பும் வழங்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். பத்தாண்டுகள் வரை இவ்வேற்பாடு நடைமுறையில் இருக்கும். இதைவிட வேறு நல்ல—சமரஸ ஏற்பாட்டை இச்சமயத்தில் செய்திருக்க முடியாது என்பதே எமது நம்பிக்கை.

இச்சமயத்தில் நேயர்கட்குச் சில மொழிகள் கூற விரும்புகின்றோம். புனா உடன்படிக்கையுடன் எல்லாம் முற்றுப் பெற்றுவிட்டதாகவும் கடமை தீர்ந்துவிட்டதாகவும் யாரும் நினைத்துவிடுவதற்கில்லை. தீண்டாமை என்னும் தீராப் பெரும்பிணியை அறவே ஒழிக்க எல்லாரும் இவ்வரிய சமயத்தில் முற்பட வேண்டும். நமது நாட்டில் இப்பிணியைத் தொலைத்துவிடுவதற்குத் தக்க தருணம் வாய்ந்திருக்கிறது. காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண்டும் என்னும் உண்மையை எல்லாரும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும். உயர் வகுப்பினர் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஆகிய இவ்விரு சமூகத்தினரிடையே அரசியலிற்போலவே சமூகத் துறையிலும் சமரஸ சமத்துவமும் சகோதர நேய உணர்ச்சியும் பெருகுமாறு எல்லாரும் தொண்டாற்ற முனைந்து நிற்கவேண்டும். இந்நிலையில் வெறும் பொறிபாணப் பரபரப்புக் காட்டிவிட்டுப் பின்னர் அடங்கிவிடுவது புனா உடன்படிக்கையின் கருத்தை நிறைவேற்றி வைப்பதாகாது என்று பணிவுடன் வற்புறுத்தி எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். காந்தியடிகள் புனா உடன்படிக்கையின் பயனாகத் தமது உபவாஸ விரதத்தை நீக்கிவிட்டு நாட்டு மக்கட்கு ஒரு அறிக்கை விடுத்துள்ளார். அதில்,

"இந்த உடன்படிக்கையினால் எதுவும் தீர்ந்துவிடவில்லை. இது முடிவின் தொடக்கமே யாகும். ஹிந்து ஜனங்களில் அநேகரை வாட்டிவரும் சமுதாயத் தொல்லைகள், சமயத் துன்பங்கள் முதலியவைகளை "உயர் வகுப்பு" ஹிந்துக்கள் இருந்தவிடம் தெரியாமல் ஒழிக்க வேண்டிய வேலை பாக்கியிருக்கிறது. கூடிய விரை

வில் இக் குறைகளை நீக்கிச் சீர்திருத்தம் செய்யப்பட வில்லையானால் நான் மீண்டும் உபவாசமிருந்து உயிர்விடக் கடமைப்பட் டிருக்கி றேன் என்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்'' என்று கூறி யிருக்கிறார். நேயர்களே நீங்கள் தீண்டாமைப் பேயைத் தொலைக்க விரும்புகின்றீர்களா? காந்தியடிகளின் ஆருயிர் நீங்க விரும்புகின் றீர்களா? என்று கேட்கின்றோம். காந்தியடிகளின் அரும்பெறல் உயிர் இவ்வுலகில் நிற்க வேண்டுமானால் தீண்டாமையைத் தொலைக்க எல்லாரும் கங்கணங் கட்டிக்கொள்ளவேண்டும். சீர்திருத்த வேட்கை படைத்தவர்கள் எல்லோரும் கிராமங்கட்குச் சென்று கிராமவாசி கட்கு தீண்டாமையின் தீமைகளை எடுத்துக்காட்டிப் பிரசாரம் செய்ய வேண்டும். இப்பொழுது தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஆலயப்பிரவேச உரிமை பற்றிய கிளர்ச்சி எங்கும் இருந்து வருகிறது. காந்தியடிகள் உண்ணாவிரதம் மேற்கொண்டிருந்த சந்தர்ப்பத்தில் வட நாட்டி லும் இங்கும் சில ஆலயங்கள் தாழ்த்தப்பட்ட மக்கட்குத் திறந்து விடப்பட்டனவேனும் இவ்விஷயத்தில் இன்னும் முரண்பட்ட உணர்ச்சியே இருந்து வருகிறது என்பதை மறுக்க முடியாது. கேரளத்தில் குருவாயூர் கிருஷ்ணன் கோவிலில் சென்ற பத்து மாதங் களாகத் "தீண்டாதார்'' ஆலயப்பிரவேச உரிமையை நிலைநாட்டச் சத்தியாக்கிரகம் நடைபெற்று வந்தது. இதைத் தலைமை வகித்து நடத்தியவர் ஸ்ரீமான் கேளப்பர். தாழ்த்தப்பட்ட மக்களின் உரி மைக்காகக் கேளப்பர் பட்ட கஷ்ட நஷ்டங்கள் பல. இவர் காந்தி யடிகள் உண்ணாவிரதம் மேற்கொண்டவுடன், தாமும் தாழ்த்தப் பட்ட மக்களின் ஆலயப் பிரவேச உரிமைக்காக உண்ணாவிரதம் மேற் கொண்டு குருவாயூர் கிருஷ்ணன் கோவிலில் தவங்கிடந்தார். குருவா யூர் கிருஷ்ணன் கோவில் கள்ளிக்கோட்டை ஜாமொரின் ஆதிக்கத் திற் குட்பட்டது. ஜாமொரின் கடுமையான வைதிக கோஷ்டியின் தலைவர். கேளப்பரின் சத்தியாக்கிரகமோ தவமோ ஜாமொரின் உள் ளத்தை உருக்கவில்லை. ஆனால் கேளப்பரின் உண்ணாவிரதம் பெருந் தொல்லையாயிருந்தமையால் காந்தியடிகள் வாயிலாக அதை நிறுத்தும் படி ஜாமொரின் வேலை செய்தார். காந்தியடிகளின் கட்டளைக் கிணங்கி ஸ்ரீமான் கேளப்பரும் தமது விரதத்தை நிறுத்திவிட்டார். மூன்றுமாத காலத்திற்குள் தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஆலயப்பிரவேச உரிமை கிடைக்காவிட்டால் காந்தியடிகளின் ஆதரவில் மீண்டும் உண்ணாவிர தச் சத்தியாக்கிரகம் மேற்கொள்ளப் படலாம். அதற்கு மாளவியாஜி யின் செல்வாக்கும் பிரசாரமுங்கூடக் கிடைக்கும் என்று தெரிகிறது, வீரத் தியாகி ஸ்ரீமான் கேளப்பர் சிறப்பாகக் கேரளத்திலும் பொது வாக இந்தியாவிலும் தாழ்த்தப்பட்ட மக்களின் ஆலயப்பிரவேச விஷ யத்தில் ஒரு கிளர்ச்சியை உண்டுபண்ணி விட்டார். இதுகாறும் ஆலயப் பிரவேச விஷயத்தில் சற்றே தயங்கிக் கொண்டிருந்த காந்தி யடிகளும் இப்பொழுது தமது முழு ஆதரவையும் அளிக்கத் தயாராக

முன்வந்துள்ளார். இச்சந்தர்ப்பத்தில் ஹரிஜனங்களின் முன்னேற்றத்திற்காக எல்லாத் தலைவர்களும் தொண்டர்களும் பாடுபட முன்னணியில் நிற்க வேண்டும். புனா உடன்படிக்கைக்கும் ஆலயம் பிரவேசத்திற்கும் தொடர்பில்லை என்று கருதுவது தவறு. தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஆலயப் பிரவேச உரிமை கிடைக்க வில்லையானால் புனா உடன்படிக்கையின் நன்னோக்கமே பாழாகிவிடும் என்பதை ஒவ்வொருவரும் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டுகின்றோம். காந்தியடிகளும் "நான் முக்கியமானதென்று கருதுவது ஆசாரத் திருத்தமும் மத சம்பந்தமான திருத்தமுமே" என்று கூறியிருக்கிறார். தென்னாட்டுத் தலைவர்களே, தொண்டர்களே, நீங்கள் என்ன செய்யப் போகின்றீர்கள்?

ஓம் தத் ஸத்.

## தென்னாட்டு மக்கட்கு காந்தியடிகளின் வேண்டுகோள்.

காந்தியடிகள் ஆறு நாட்களாக உண்ணாவிரதமிருந்து கீழ்க்கண்ட வேண்டுகோளை ஆங்கிலத்திலும் தமிழிலும் கையொப்பமிட்டுத் தென்னாட்டு மக்கட்கு விடுத்திருக்கின்றார்:—

"நாள்தோறும் புராதன கோவில்கள் தாழ்த்தப்பட்டோர் எனப்படுவோர் நுழையும்படி அனுமதிக்கப்படுவதைக் காண நான் மகிழ்ச்சிப் பெருக்கடைகிறேன். இதுபற்றி இந்துமதம் புனிதமடைகின்றது. என் மனோவாக்குக் காயத்தினால் கொண்ட வேதனை மிக அதிகம். ஆயினும், கோவில்களின் கதவுகள் தாழ்த்தப்பட்டவர்களுக்குத் திறக்கப்பட்டமைபற்றி நான் பெரிதும்மகிழ்கின்றேனெனினும் என் மகிழ்ச்சி துக்கங் கலந்ததாகவே யிருக்கின்றது. தீண்டாமை சம்பந்தமாக என் தொண்டு தென்னாப்பிரிக்காவில் ஆரம்பித்ததெனினும், தென்னிந்தியாவில் தான் ஆரம்பமானதாகக் கூற வேண்டும். அப்பேர்ப்பட்ட விடத்தில் இன்னும் தீண்டப்படாதாரெனப்படுவோரைக் கோவிலுக்குள் அனுமதிக்காமலிருப்பது எனக்கு மிகவும் வருத்தத்தைத் தருகின்றது". "கோவில்களில் தீண்டப்படாதாரும் அனுமதிக்கப்பட்டா லல்லது அக்கோவிலிலுள்ள விக்கிரகத்தில் கடவுள் தன்மை துலங்காதென்றே நான் இந்து என்னும் முறையிலும் இந்து மதத்தின் தத்துவத்தை நாடுவோன் என்னும் முறையிலும் கூறக்கூடும்." "மக்கள் இன்று தீண்டப்படாதாரானால் கடவுளும் தீண்டப்படாதாரே."

எரவாடா சிறை,<br>காலை மணி 7,<br>25-9-32.

மோகன்தாஸ் காந்தி.

# காந்தியடிகளின் சபதம்.

வகுப்புப்பிரச்சினை சம்பந்தமாகச் சென்ற மார்ச்சுமீ 11ம் தேதியில் காந்தியடிகள் இந்திய மந்திரிக்கு ஒரு நிருபம் தீட்டியிருந்தார். அதில் அடிகள் தாழ்த்தப்பட்ட மக்கட்குத் தனித்தொகுதி வழங்கக் கூடாது என்று எச்சரிக்கை செய்திருந்தார். ஒருகால் தனித்தொகுதி முறை வழங்கப்பட்டால் தாம் பட்டினி கிடந்து உயிர் துறக்க நேரும் என்றும் குறிப்பிட்டிருந்தார். காந்தியடிகளின் எச்சரிக்கையை லக்ஷியம் செய்யாமல் அரசாங்கத்தார் தங்கள் வகுப்புத் தீர்ப்பில் தாழ்த்தப்பட்ட மக்கட்குத் தனித்தொகுதி முறையை ஏற்படுத்தி விட்டனர். காந்தியடிகள் மீண்டும் முதன் மந்திரிக்கு ஒரு நிருபம் விடுத்தார். அதில் தாம் முன்பு கடிதம் விடுத்திருந்ததை நினைவூட்டியதோடு அரசாங்கத்தின் வகுப்புத் தீர்ப்புக்கு எவ்வகையிலும் இணங்குவதில்லை என்று உறுதி மேற்கொண்டிருப்பதாகவும் அரசாங்கத்தார் அத்தீர்ப்பை மாற்றாவிட்டால் செப்டெம்பர் 20-ம் தேதி முதல் உண்ணாவிரத மேற்கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டு விடும் என்றும் தெரிவித்திருந்தார். முதன்மந்திரி காந்தியடிகளின் கருத்திற் கிணங்காமல் அரசாங்கத் தீர்ப்பே சரியானது என்று சாதித்து விட்டார். எனவே காந்தியடிகள் தமது சபதப்படி செப்டெம்பர் 20-ம் தேதி முதல் உண்ணாவிரதம் பூண்டார். காந்தியடிகளின் உண்ணாவிரதம் உலகைத் திடுக்கிடச் செய்துவிட்டது. "உயர்ஜாதி" இந்துத் தலைவர்களும், தாழத்தப்பட்ட வகுப்புத் தலைவர்களும் பம்பாயில் கூடினர். அல்லும் பகலும் கலந்து பேசினர். காந்தியடிகளைப் பலதடவை பேட்டி கண்டனர். இறுதியில் எல்லாரும் ஒப்புக் கொள்ளத்தக்க சமரஸ உடன்படிக்கை ஏற்பட்டது. இவ்வுடன்படிக்கையை அரசாங்கத்தாரும் ஏற்றுக்கொண்டு தாங்கள் வகுப்புத் தீர்ப்பில் கண்ட அம்ஸத்தைமாற்றி விடுவதாக உறுதி கூறினர். காந்தியடிகள் வெற்றி பெற்றார்! உண்ணா விரதம் துறந்தார். இப்போது அடிகளின் உடல் நலம்பெற்றுவிட்டது. காந்தியடிகள் வாழ்க.

முதலில் பம்பாயிலும் பிறகு புனாவிலும் நடைபெற்ற உயர் ஜாதி ஹிந்துக்கள், தாழ்த்தப்பட்டார் ஆகியோரின் தலைவர்களின் மகாநாட்டின் பயனாகவும், மகாத்மாவுடன் கலந்தாலோசித்ததன் பயனாகவும் உயர்ஜாதி ஹிந்துக்களுக்கும் தாழ்த்தப்பட்டவர்களுக்கும் இடையில் சட்டசபைத் தேர்தல் முறை சம்பந்தமாய் சமரச ஒப்பந்தம் ஏற்பட்டது. அந்த ஒப்பந்த விவரம் பின் வருமாறு:—

சட்டசபைகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதித்துவ சம்பந்தமாயும் மற்றும் அவர்களின் க்ஷேமத்தைப் பொறுத்த விஷயங்களைப் பற்றியும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும், இதர ஹிந்து சமூகத்தினருக்கும் கீழ்க்கண்ட ஒப்பந்த மேற்பட்டுள்ளது.

மாகாண சட்ட சபைகளில் பொதுத் தொகுதி ஸ்தானங்களுள் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்குக் கீழ்க்கண்ட விவரப்படி ஸ்தானங்கள் ஒதுக்கப்பட வேண்டும்:—

| | |
|---|---|
| சென்னை | 30 |
| பம்பாய், சிந்து | 15 |
| பாஞ்சாலம் | 8 |

| | |
|---|---|
| பீகார், ஒரிசா | 18 |
| மத்திய மண்டலம் | 20 |
| அசாம் | 7 |
| வங்காளம் | 30 |
| ஐக்கிய மண்டலம் | 20 |
| மொத்தம் | 148 |

பிரதம மந்திரியின் தீர்ப்பில் மாகாண சட்டசபை மொத்த ஸ்தானங்களைப்பற்றி அறிவித்துள்ள எண்ணிக்கையை அடிப்படையாகக்கொண்டே பிரஸ்தாப ஸ்தானங்கள் நிர்ணயிக்கப் பெற்றுள்ளன.

### தேர்தல் முறை

(2) கீழ்க்கண்ட முறைப்படி கூட்டுத் தொகுதி மூலமே மேற்கண்ட ஒதுக்கப்பட்ட ஸ்தனங்களுக்குத் தேர்தல் நடைபெறும். ஒதுக்கப்பட்ட ஒவ்வொரு ஸ்தானத்திற்கும் பூர்வாங்க தேர்தலொன்று நடைபெறும். அதாவது பொது வாக்காளர் ஜாபிதாவி லடங்கியுள்ள தாழ்த்தப்பட்ட வகுப்பு ஓட்டர்கள் மட்டும் இப் பூர்வாங்க தேர்தலில் கலந்துகொள்வர். தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த 4 அபேக்ஷகர்களை முதலில் தனி ஓட்டுகள் மூலம் அவர்கள் தேர்ந்தெடுப்பர்.

அவ்விதம் அதிக ஓட்டுகள் பெற்றுத் தேர்ந்தெடுக்கப் பெற்ற 4 பேர்களும், ஷை ஒதுக்கப்பட்ட ஸ்தானத்திற்குப் பொதுத் தொகுதி அபேட்சகர்களாக நிற்பர்.

### இந்தியா சட்டசபை

(3) இந்தியா சட்டசபைக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இவ்விதமே கூட்டுத் தொகுதி முலம் பிரதிநிதித்துவ மளிக்கவேண்டும். 2-வது செக்ஷனில் குறிப்பிட்டுள்ள முறைப்படி, ஸ்தானங்களை தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கப்பட்டுப் பூர்வாங்கத் தேர்தலையும் நடத்தவேண்டும்.

(4) இந்தியா சட்டசபையில், பொதுத் தொகுதிக்கு ஏற்படுத்தும் ஸ்தானங்களுக்குள் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு 18% ஸ்தானங்களை ஒதுக்கவேண்டும்.

(5) இந்தியா சட்டசபை, மாகாண சட்டசபை இவைகளுக்குப் பூர்வாங்கத் தேர்தல் நடத்தும் முறை, முதல் 10 வருஷங்களுக்குப் பின் தானுகவே ரத்தாகிவிட வேண்டும். ஆனுல், கீழ்க்கண்ட 6-வது செக்ஷன்படி அக்காலத்திற்கு முன்பே ஓர் பரஸ்பர ஒப்பந்தம் ஏற்பட்டு விடுமாகில், அக்காலத்திற்கு முன்பே இம்முறையை ரத்து செய்து கொள்ளலாம்.

(6) இவ்வொப்பந்தத்தின் 1, 4 பிரிவுகளில் குறிப்பிடப்பட்டுள்ளபடி, இந்தியா சட்டசபையிலும், மாகாண சட்டசபைகளிலும் ஸ்தானங்களை ஒதுக்கும் முறை இந்த ஒப்பந்தம் அமுலிலுள்ளவரை நீடித்திருக்கும்.

(7) மாகாண, இந்தியா சட்ட சபைகளுக்குத் தாழ்த்தப்பட்டோரின் வாக்குரிமை லோதியன் கமிட்டி அறிக்கையில் குறிப்பிட்டுள்ளபடியே இருத்தல் வேண்டும்.

(8) ஸ்தல ஸ்தாபனத் தேர்தலுக்கோ, அன்றி சர்க்கார் உத்தியோகங்கள் பெறுவதற்கோ, தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவரென்ற காரணத்திற்காக எவருக்கும் எவ்வித அசௌகரியங்களு மிருக்கக் கூடாது. சர்க்கார் உத்தி

யோகங்கள் பெற நிர்ணயிக்கப்படும் கல்வி யோக்கியதாம்சங்கள் பெற்றிருக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்களுக்கு நேர்மையான முறையில் உத்தி யோகங்களளிக்கச் சகல முயற்சிகளேயும் செய்யவேண்டும்.

(9) ஒவ்வொரு மாகாண கல்வி கிராண்ட் நிதியிலும் தாழ்த்தப்பட்டவர்க ளுக்குக் கல்வி சௌகரியங்களளிக்கப் போதிய தொகையை ஒதுக்கி வைக்க வேண்டும்.

இந்த ஒப்பந்தத்தில் புனவில் பிரசன்னமாயிருந்த பண்டித மதன் மோகன் மாளவியா, டாக்டர் அம்பேத்கார், டாக்டர் சோலாங்கி, ராவ்பகதூர் ஸ்ரீனிவாசன் சர். தேஜ்பகதூர் சாப்ரூ, ஸ்ரீ. ஜெயகர், ராவ்பகதூர் எம். ஸி. ராஜா, ஸ்ரீ. பி. பாலு, ஸ்ரீ. ராஜபோஜ், ஸ்ரீமான்கள். சிவராஜ், பிர்லா, எம். பிள்ளை, சர். ஸி. பி. மேத்தா, கவாய் தியோதார், ஸி. ராஜகோபாலாச்சாரி, ராஜேந்திர பிரசாத், பகேல் முதலியவர்கள் கையொப்ப மிட்டுள்ளனர்.

## "நான் பட்டினி கிடப்பதேன்?"

மகாத்மா காந்தியடிகள் தமது உபவாச சம்பந்தமாய் செப்டம்பர் மாதம் 15-ந் தேதியன்று பம்பாய் சர்க்காருக்கு ஒரு அறிக்கையை அனுப்பி யிருந்தார். அந்த அறிக்கை பின்வருமாறு :—கடவுள் பெயரால் நான் உப வாச விரதமிருக்கத் தீர்மானித்துவிட்டேன். அவரது ஆக்ஞைப்படியே மிகக் தாழ்மையுடன் இதை ஏற்றுக்கொண்டிருப்பதாக நான் நம்பு கிறேன். விரத ஆரம்பத் தேதியை ஒத்திவைக்க வேண்டுமென்றும், பொது ஜனங்கள் வேண்டிய ஏற்பாடுகள் செய்ய அவர்களுக்கு ஓர் சந்தர்ப்பமளிக்க வேண்டுமென்றும் பல நண்பர்கள் என்னை வற்புறுத்திக் கேட்டுக்கொண்டிருக் கிறார்கள். ஆனால் நான் பிரதம மந்திரிக்கு எழுதியுள்ள கடிதத்தில் குறிப்பிட் டுள்ள காரணத்தைத் தவிர இதர காரணங்களுக்காக ஏற்கனவே குறித்த நேரத் தில் ஒரு மணியைக்கூட மாற்ற முடியாமைக்கு வருந்துகிறேன்.

என்மீது நம்பிக்கை கொண்டுள்ள இந்தியர்களுக்கும் அந்நியர்களுக் கும் விரோதமாகவும், என்னிடம் நம்பிக்கை யில்லாதவர்களின் சார்பாகவுமே பட்டினிகிடக்க உத்தேசித்துள்ளேன். ஆங்கில உத்தியோக வர்க்கத்தினருக்கு விரோதமாக நான் பட்டினி கிடக்கவில்லை. இவை யாவற்றையும்விட மத விஷயத்தில் சரியான காரியங்களை மேற்கொள்ளுமாறு ஹிந்துக்களின் மனச் சாட்சியைத் தூண்டிவிடுவதற்காகவே நான் இதை மேற்கொண்டிருக்கிறேன். வீண் பரபரப்பை ஏற்படுத்துவதற்காக நான் இப் பட்டினி விரத்தை ஏற்க வில்லை. நியாயம் வழங்கவேண்டு மென்ற ஒரே காரணத்திற்காகவே நான் எனக்குள்ள முழுச் சக்தியையும் உபயோகித்துவிடத் தீர்மானித்துவிட்டேன். 'அவனன்றி ஓரணுவு மசையாது' என்னும் ஆன்றோர் மொழியில் நான் பூரண நம்பிக்கை கொண்டவன். இனியும் தொண்டு செய்ய இச்சடலத்தை அவன் விரும்பினல், இதைக் காப்பாற்றுகிறான். அவனது அருளின்றேல், எவரும் இச்சரீரத்தைக் காத்துவிட முடியாது. ஏதோ சொற்பகாலத்திற்கு இத் தேகம் தாங்கமுடியு மென்று மனித முயற்சியால் நான் கூறுகிறேன்.

ஜாதி ஹிந்துத் தலைவர்களும், தாழ்த்தப்பட்ட வகுப்புத் தலைவர்களும் ஏதோ பகட்டுக்காகச் செய்துகொள்ளும் ஒப்பந்தங்க ளொன்றும் பயனில்லை. ஒப்பந்தம் பயன்தரவேண்டுமாயின் அது உண்மையானதாக இருத்தல் வேண் டும். தீண்டாமையை அடியோடு வேரறுக்க ஹிந்து பொது ஜனங்கள் இன்

னும் தயாராயில்லா திருப்பார்களாயின், சற்றும் ஆலசியமின்றி என்னை தத்தம் செய்துவிட வேண்டியதே.

கூட்டுத் தொகுதியை எதிர்ப்பவர்களை எவ்விதத்திலும் வற்புறுத்தல் கூடாது. அவர்கள் எதிர்ப்பதின் காரணமனைத்தையும் நான் எளிதில் அறிந்துகொண்டுவிட்டேன். என்னிடம் அவநம்பிக்கைகொள்ள அவர்களுக்குச் சகல உரிமையும் காரணமு மிருக்கின்றன. 'தீண்டாதார்' எனப்படுவோரை ஜாதிப் படுகுழியிலமர்த்தி நசுக்கி இந்துக்களெனும் பொய்யான "உயர்" வகுப்பை நான் சேர்ந்தவனன்றோ? இவ்வளவு கஷ்டத்திற்கு உட்பட்டும் அவர்கள் ஹிந்து சமூகத்திலேயே சேர்ந்து இருந்துவருவது பெரும் அதிசயமேயாகும்.

கூட்டுத் தொகுதிக்கு அவர்கள் எதிர்ப்பு நியாயமானதே என்று நான் கூறமுடியு மெனினும், அவர்கள் இவ்விஷயத்தில் தவறி இருக்கின்றன ரென்றே நான் நம்புகிறேன். ஹிந்து சமூகத்திலிருந்து, தாழ்த்தப்பட்டவர்களைப் பிரித்து ஓர் தனி வகுப்பாக ஏற்படுத்திவிடலாம். இதனால் ஹிந்து மதத்திற்கே என்றுமழியாத அபகீர்த்தி ஏற்பட்டுவிடும். இதனால் தாழ்த்தப்பட்டோருக்கு உண்மையில் நன்மை ஏற்படுவதாயின் நான் இவ்வித அபகீர்த்தியைப் பொருட்படுத்தக்கூடாது. ஆனால் அவர்களின் வாழ்க்கை ஜாதி ஹிந்துக்களின் வாழ்க்கையுடன் பெரிதும் பிணைக்கப்பெற்றிருக்கிறது. அவர்களை ஜாதி ஹிந்துக்களினின்றும் தனித்துப் பிரிப்பது அசாத்தியமாகு மென்பதே நான் இவ்விஷயமாக அனுபவத்தில் கண்ட உண்மை.

"தீண்டாதவ" ரெனப் படுவோர் ஏககுடும்பத்தின் ஓர் பகுதியைச் சார்ந்தவர்கள். ஹிந்து சமூக வாழ்வில் அவர்கள் எவ்வளவோ கஷ்ட நிஷ்டூரங்களுக்கு உட்பட்டிருப்பினும், அவர்கள் ஹிந்து மதத்தைக் கைவிட விரும்பவில்லை. ஹிந்து மதத்தில், வார்த்தைகளால் விளக்க முடியாத ஏதோ ஓர் விசேஷமிருக்கிறது. அதுதான், "தீண்டாதவ"ரெனப்படுவோரை அவர்களையு மறியாமலே ஹிந்து மதத்திற் குட்படுத்தி வைத்துக்கொண் டிருக்கிறது.

எனவே தற்போது ஹிந்து சமூகத்திலிருந்து அவர்களைப் பிரித்துவிடச் செய்துவரும் ஏற்பாடுகளை உயிரைக்கொண்டு எதிர்க்கவேண்டியது என்னைப் போன்றவர்களின் கடமையாகிறது. இவ்வித எதிர்ப்பின் கருத்து மகத்தானதாகும். ஹிந்து சமூகத்திற்குள் தாழ்த்தப்பட்டோருக்குப் பூரண சுதந்தரமளிக்காத எவ்வித சமரச ஒப்பந்தமும், பிரஸ்தாப பிரிவினை யோசனையை தடுத்துச் சரிக்கட்ட முடியாது.

### மூட நம்பிக்கை ஒழிக

பொறுப்பு வாய்ந்த ஹிந்துக்கள் சிந்திக்க வேண்டிய முக்கிய பிரச்சினை ஒன்றுண்டு. "தாழ்த்தப்பட்ட" வகுப்பினரை சமூக, ராஜீயத் துறைகளில் பல்வேறு விதமாக ஹிம்சித்தால், அதை என்போன்ற சீர்திருத்தக்காரர் படை படையாகத் திரண்டு நிரந்தரமாகப் பட்டினி கிடந்து சத்தியாக்கிரகம் செய்து எதிர்க்க முன் வரும்பொழுது, அவ்வித சத்தியாக்கிரக பலத்தை எதிர்த்துச் சமாளிக்க முடியுமா என்பதை அவர்கள் நினைத்துப் பார்க்கவேண்டும். ஹிந்து மதத்தில் வெகுகாலமா யிருந்துவரும் மூட நம்பிக்கைகளையும் குருட்டுப் பழக்கங்களையும் களைந்தெறிந்து ஹிந்து மதத்தைச் சுத்தி செய்து, இவ்வகுப்பினர் விடுதலை யடையுமாறு செய்வதில் தங்கள் உயிரையும் ஓர் பொருட்டாக மதிக்காத இவ்விதச் சீர்திருத்தக்காரர்கள் தற்போது இந்தியாவிலிருந்து வருகின்றன ரென்றே நான் நம்பி இருக்கிறேன்.

### தனித்தொகுதி கூடாது

என் உபவாச விரத சம்பந்தமாய் ஓர் தப்பெண்ணம் நிலவி வருவதாகத் தெரிகிறது. தாழ்த்தப்பட்டவர்களுக்கு எவ்வித ரூபத்திலும் சட்டபூர்வமாகத் தனிவாக்காளர் தொகுதியை ஏற்படுத்தக் கூடாதென்பதை எதிர்த்தே நான் உபவாசமிருக்கிறேன். அவ்வித பிரிவினையை நிரந்தரமாக ஒழித்துவிடும்போது என் உபவாச விரதமும் பூர்த்தியடையும். ஸ்தானங்களை ஒதுக்குவதுபற்றியும், இப் பிரச்சினையைக் கையாள வேண்டிய நேர்மையான முறைகளைப்பற்றியும் என் மனதில் திட்டமான அபிப்பிராயங்கள் பல இருக்கின்றன. ஓர் கைதியாக இருக்கையில், அவ்வித யோசனைகளை வெளியிடுவதற்கு நான் அருகனல்ல னென்று நினைக்கிறேன். ஆனால் பொறுப்பு வாய்ந்த ஜாதி ஹிந்து தலைவர்களும், தாழ்த்தப்பட்ட வகுப்புத் தலைவர்களும் சேர்ந்து கூட்டுத் தொகுதி முறைமீது செய்துகொள்ளும் எவ்வித ஒப்பந்தத்தையும், பொதுக் கூட்டங்கள் மூலம் சகல ஹிந்துக்களும் ஒப்புக்கொண்டபின், நான் அதை ஏற்றுக் கொள்ள வேண்டியவனே யாவேன்.

### இதர அம்சங்கள் எனக்குடன்பாடல்ல

ஆனால் ஓர் விஷயத்தை நான் தெளிவாகக் கூறவேண்டி யிருக்கிறது. தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரச்சினை திருப்திகரமாகத் தீர்ந்துவிட்டால், பிரிட்டிஷ் சர்க்கார் செய்துள்ள வகுப்புத் தீர்ப்பின் இதர அம்சங்களை நான் ஒப்புக்கொள்ள இணங்குவதாகக் கருதிவிடக்கூடாது. அத்தீர்ப்பில் அடங்கியுள்ள பல அம்சங்கள் சுதந்தர ஜனநாயக அரசியலை நடத்துவதை அசாத்திய மாகச் செய்யும் என்றே நான் கருதுகிறேன். மேலும் தாழ்த்தப்பட்டோர் பிரச்சினை திருப்திகரமாகத் தீருவதால் பின்னர் ஏற்படுத்தப் போகும் அரசியலமைப்பை நான் ஒப்புக்கொள்ள இணங்குவதாகக் கருதிவிடலாகாது. இவைகளனைத்தும் அரசியல் விஷயங்களாகும். தேசீய காங்கிரஸே இவைகளை ஆலோசித்துத் தீர்மானிக்க வேண்டும். என் ஆன்மார்த்த விஷயங்களுக்கு இவைகள் முற்றும் புறம்பானவையே யாகும். மேலும் கைதியாக இருக்கையில் நான் இவைகளைப்பற்றி என் சொந்த அபிப்பிராயங்களைக் கூறுவதற்கில்லை. என் பட்டினி விரதம் ஓர் குறிப்பான விஷயத்தையே பற்றியது.

### அநுதாபப்பட்டினி வேண்டாம்

தாழ்த்தப்பட்ட வகுப்புப் பிரச்சினை பெரிதும் மத சம்பந்தமானது. நான், என் வாழ்நாள் முழுதிலும் இவ்விஷயத்தில் சிரத்தை காட்டி கவனம் செலுத்தி வந்திருப்பதால் விசேஷமாக எனக்கே உரிமையானதெனக் கருதுகிறேன். இது என்னிடம் ஆன்மார்த்தமாக ஒப்புவிக்கப்பெற்ற ஓர் மேலான பொறுப்பு என்று நான் மதிப்பதால் இதைக் கைவிட்டுவிட முடியாது. ஞானமடையவும் பிராயச் சித்தத்திற்காகவும் பட்டினி கிடந்திறப்பது தொன்று தொட்டிருந்துவரும் ஓர் முறையாகும். கிறிஸ்தவமதத்திலும், இஸ்லாம் மதத்திலும் இம் முறை கையாளப் பெற்றுள்ளதை நான் அறிந்திருக்கிறேன். ஆன்ம சுத்திக்காகவும் பிராயச்சித்தத்திற்காகவும் உபவாசமிருந்து வந்திருப்பதற்கு ஹிந்து மதத்தில் எவ்வளவோ உதாரணங்க ளிருக்கின்றன. இது ஓர் விசேஷ உரிமையாக இருக்கலாம். ஆனால் இது ஓர் கடமையாகும். மேலும் இவ்விஷயத்தில் எனக்கு மிக்க அநுபவ முண்டு. குருட்டு நம்பிக்கையுடனோ, அன்றி என்னிடம் அனுதாபம் காட்டுவதற்காகவோ எனது நண்பர்களும், என்னிடம் அனுதாபங் கொண்டவர்களும்

என் முறையைப் பின்பற்றக் கூடாதென எச்சரிக்கை செய்கிறேன். அவர்க ளனைவரும் "தீண்டாதாரு"க்குத் தன்னலமற்ற பெருந் தொண்டு செய்யப் பயிற்சிபெறலாம். அவர்கள் பட்டினிகிடக்க வேண்டிய காலம் வரும்பொழுது அவர்களுள்ளத்திலேயே ஓர் தனி ஒளி பிறக்கும்.

### அஹிம்ஸையின் முடிவு

எவர்மீதும் வெறுப்போ, அன்றிக் கோபமோ கொண்டு நான் இந்த உப வாச மாரம்பிக்கவில்லை. நிர்மலமான களங்கமற்ற காரணத்திற்காகவே நான் இதை மேற்கொண்டிருக்கிறேன். இதுவே அஹிம்சா நெறியின் முடிவாகு மென்பது எனது கருத்து. எனக்கோ அன்றி நான் எதற்காகப் பாடுபடு கிறேனோ அதற்கோ விரோதமாக இருப்பவர்கள் மீது மிருக பலத்தை உப யோகிப்பவர்கள் என் மரணத்தைத் துரிதப்படுத்துபவராவர். பொதுவாக எல்லா விஷயங்களிலும், சிறப்பாக பிரஸ்தாப தகராறிலும், விரோதிகள் பால் மிக மரியாதையும் மதிப்பும் காட்டுவது வெற்றியடைய இன்றியமையாத தாகும்.

### "நானும் தீண்டப் படாதவனே"

"ஒடுக்கப்பட்டவர்கள் என்று சொல்லப்படுகிறவர்களுக்குத் தனித் தொகுதிகளை அமைப்பதை நிறுத்திவிடுவதானது நான் செய்துகொண்டிருக் கிற பிரதிக்ஞையின் வாசகப்படி எனக்குத் திருப்திதரக்கூடிய தேயாயினும், அந்தப் பிரதிக்ஞை செய்து கொண்டதற்குக் காரணம் எதுவோ அந்தக் காரணத்தை உத்தேசிக்கையில் போதுமானதாக மாட்டாது; என்னை நானு கவே தீண்டாதானுகச் செய்துகொண்டுள்ள ஹோதாவில் தீண்டாதார்களுக் கும் தீண்டக்கூடியவர்களுக்கும் ஒரு ராஜியைத் தட்டிக்கொட்டி ஏற்படுத்தி விடுவதுடன் நான் சும்மாவிருக்கப் போகிறதில்லை. நான் விரும்புவது என்ன, நான் எதற்காக உயிர் வாழ்கிறேன், எதற்காக நான் பிராணத்தியாகம் செய்ய வும் பரம சந்தோஷமடைவேன் என்பதைச் சொல்லுகிறேன்—இந்தத் தீண்டாமையை வேருட்படக் களைந்துவிட வேண்டுமென்பதே எனது நோக் கம்" என்று மகாத்மாகாந்தி எரவாடாச் சிறையில் தம்மைப் பேட்டிகண்ட பத்திரிகைப் பிரதிநிதி கோஷ்டியிடம் சொன்னுர்.

## காந்தியடிகளின் பிறப்பு விழா.

மகாத்மா காந்தியின் ஜெயந்தி (பிறப்பு விழா)யை அனுஷ்டிப்பதற்காக சென்ற மாதம் 27-ந் தேதி மாலை புனு சிவாஜி மந்திரத்தில் நடந்த பொதுக் கூட்ட மொன்றில், கவி கவீந்திரநாத தாகூர் ஓர் அரிய பிரசங்கம் நிகழ்த்தி னுர். அதற்கு பண்டித மாளவியா தலைமை வகித்தார். கூட்டம் நடப்பதற்கு முன் கவி ரவீந்திரர் தமது கையால் எழுதியிருந்த பிரசங்கத்தைச் சிறையி லுள்ள மகாத்மா காந்தியிடம் சமர்ப்பித்தார்.

கவி ரவீந்திரர் செய்த பிரசங்க விவரம் பின்வருமாறு:—இன்று நடை பெறும் மகாத்மா காந்தியின் ஜெயந்தியானது ஓர்வித பயங்கரமான உணர்ச் சியை உண்டாக்கி யிருக்கிறதெனக் கூறுவது மிகையாகாது. மரணமானது அவரிடமிருந்து விலகி, வெற்றியுடன் அவர் புனர் ஜென்ம மெடுத்திருக்கிறுர்! சதாரணமாக மானிடர்கள் தங்களுக்குச் சுற்றுப் பக்கத்திலுள்ள வெகு சில உறவினர்களுடனும், நண்பர்களுடனும் தங்கள் வாழ்க்கையை நடத்தி, கடை

சியில் மரண மடைகிறார்கள். அத்தகையோருக்கு இவ்வுலகில் பரந்த சம்பந்த மிருப்பதில்லை. பிரதி வருஷமும் அவர்களும் தங்கள் ஜெயந்தி வைபவத்தை அனுஷ்டிக்கிறார்கள். அவர்கள் விஷயத்தில் உறவினர், நண்பர் முதலியோருக்குள்ள அன்பானது குறையாம லிருந்துவருவதைக் காட்டுவதே ஜெயிந்தியின் நோக்கமாகும்.

### உயர்ந்த ஆத்மாக்கள்

ஆனால், உயர்ந்த ஆத்மாக்களுக்கு உலகத்திலுள்ள சம்பந்தம் பரந்தாகும். அவர்களின் உயர்வைப் பற்பல வகுப்பைச் சேர்ந்த ஜனங்களும், பற்பல மக்களும் அங்கீகரிக்கிறார்கள். அத்தகைய உயர்ந்த ஆத்மாக்களுடைய ஜெயந்தியை நாம் கொண்டாடுவதால், எக்காலத்தும் அவர்கள் நம்மைச் சேர்ந்தவர்களென நாம் உணருவதுடன், அதனால் இவ்வுலகத்துடன் ஆத்மார்த்த விஷயங்களில் நமக்கு நெருங்கிய சம்பந்த மேற்படுவதாகவும் நமக்கு உணர்ச்சி உண்டாகிறது. மக்களும் மானிடவர்க்கத்துடன் நமக்கு நெருங்கிய சம்பந்த மிருக்கிற தென்ற தத்துவத்தையும் அதிலிருந்து நாம் நன்கு அறிகிறோம்.

### மகத்தான அதிர்ஷ்டம்

மேலே கூறியபடி அத்தகைய மானிட சிரேஷ்டர் ஒருவர் இன்று நம்மிடை தோன்றியிருப்பது நமது மகத்தான நல்ல அதிர்ஷ்டமாகும். இச்சந்தர்ப்பத்தில் மற்றோர் அபூர்வமான விஷயத்தையும் குறிப்பிடவேண்டியது அவசியம். அதாவது, சுதந்தரத்தையும், சத்தியத்தையும் நிலை நிறுத்துவதற்காக இதற்குமுன் நம்மிடை அவதரித்த பலரையும் நாம் புறக்கணித்து விட்டதுபோல், மகாத்மா காந்தியையும் புறக்கணிக்காம லிருப்பது நமக்கு மிகுந்த நல்ல காலமாகும். இந்திய தேசம் முழுதும் மாத்திரமல்ல, வெளி நாடுகளிலும்கூட, அவரது மகிமையானது வேலைசெய்து வருகிறது. அதனால், நம்மிடை சத்திய உணர்ச்சி உதயமாகி, நம்மிடையுள்ள சுயநல உணர்ச்சி மறையும்படி அது செய்திருக்கிறது. அவரது வாழ்க்கையானது சுதந்தரம், தியாகம், தொண்டு, ஆத்ம அர்ப்பணம் முதலியவைகளின் பெருமையை நமக்கு இடைவிடாது உபதேசித்து வருகிறது.

### மகாத்மா யார்?

மிகத் தெய்வீகமான இச்சமயத்தில், நாம் மனப்பூர்வமாக நமது உயர்ந்த அபிப்பிராயங்களைத் தெரிவிக்க வேண்டுமே யன்றி வீண் பெருமையுடனும், உணர்ச்சியுடனும் திருப்தி யடைந்து விடுவது ஏற்றதல்ல. தற்போதுள்ள நிலைமைக்குத் தகுந்தவாறு நாம் நடந்துகொள்ள வேண்டும். அதாவது மகாத்மா தாமாக ஏற்றுக்கொண்டுள்ள பொறுப்பை அவருடைய கையிலிருந்து நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். எல்லோர் மனதையும் ஆட்கொண்டு சகலருடைய மனதிலும் வாசம் செய்யும் இறைவனைத்தான் "மகாத்மா" எனக் கூறவேண்டுமென்று உபநிஷத்துக்களிலிருந்து நாம் அறிந்து கொண்டிருக்கிறோம். இன்று நாம் பூஜிக்கும் ஒருவருக்கு "மகாத்மா" என்ற உயர்ந்த பட்டம் முற்றிலும் ஏற்றதாகும். அவர் ஒரு சிலருடைய மனதில் மாத்திரம் வசிக்கவில்லை. இந்தியாவில் பிறந்துள்ள எண்ணிக்கையற்ற ஜனங்கள் மனதை அவர் ஆட்கொண்டுள்ளார். இனி இந்

தியாவில் பிறக்கப் போகும் ஜனங்களும் அவரையே தியானம் செய்வார்களென்பதில் சந்தேகமில்லை. இந்த ஆத்மாவானது (மகாத்மா காந்தி) மற்ற ஆத்மாக்களின் தத்துவத்தை அறியும் சக்தியுடையது. நமது சரித்திரத்திலேயே ஒருவரும் சாதிக்க முடியாத காரியத்தை மகாத்மா காந்தி சாதித்துள்ளார். இந்தியா பூகோளத்திலுள்ள வெறும் ஓர் தேச மல்ல வென்பதையும், தாங்கள் ஜனனமாகி வாழ்க்கையை நடத்தி வரும் சத்திய நாடென்பதையும் பாமரஜனங்களும் அறிந்து கொள்ளும்படி அவர் செய்துள்ளார்.

### "அடிமைச் சங்கிலியை அறுத்தோம்"

பல ஆண்டுகளாக இந்தியா மீதுள்ள சுமையையும், அகஸ்மாத்தான பிறப்பின் காரணமாகப் பலரை அவமதித்துவந்த அக்கிரமத்தையும், சகல மானிடருக்கும் சமமான உரிமைகளைப் பெரும்பாலானவர்கள் விஷயத்தில் அளிக்கவும், அனுதாபப்படவும் மறுத்த பாபத்தையும் அகற்றும் தெய்விகமான கடமையில் ஈடுபட்டுள்ள மகாத்மா காந்தியுடன் நாமும் கலந்து கொள்ளத் தீர்மானித்துள்ளோம். அவ்விதம் நாம் செய்வதால், ஆத்மார்த்தமான அடிமைத்தனத்திலிருந்து இந்தியாவை விடுதலை செய்வதுடன், உலகத்திலுள்ள மானிட வர்க்கத்திற்கே நாம் ஓர் உயர்ந்த வழியைக் காட்டியவர்களாவோம். பிறப்பினால் ஓர் சாராரைக் கொடுமைக் குள்ளாக்கும் வழக்க மிருக்கும் தேசங்களுக்கெல்லாம் இது ஓர் சிறந்த படிப்பினை யாகும். இன்னும் எவ்விதத்திலும் மனச்சாட்சிக்கு விரோதமாக நடக்கக் கூடாதென்ற உயர்ந்த தத்துவத்தையும் மகாத்மாகாந்தி நமக்கு உபதேசித்துள்ளார்.

### அற்புத வெற்றி

நமது தேசத்திலும், வெளிநாடுகளிலுமுள்ள அற்பகுணமுள்ள பலர், மகாத்மா தமது தவத்தை ஆரம்பித்ததும் பரிகாசமும், ஆர்பாட்டமும் செய்தார்கள். ஆனால், அவர்கள் பரிகாசம் பாழாகி, நமது கண்களுக்கு முன்னிலையிலேயே அற்புதம் நிகழ்ந்திருக்கிறது. பண்டைக் கால முதல் இருந்து வரும் பாழும் வழக்கமாகிற பாறாங்கல் மலைகள் பொடிப்பொடியாகி விட்டன. நமது தேசீய வாழ்க்கையையே சிதைத்துவரும் கர்நாடக முட்டுக்கட்டைகள் அகன்று வருகின்றன.

### "சபதம் பூர்த்தியாக வேண்டும்"

அவர் செய்த தவத்தின் பயனாக அற்புதமான, மகத்தான வெற்றி கிடைத்திருக்கிறது. ஆனால், தீண்டாமையாகிற தீமைகள் அடியோடு ஒழிய வேண்டுமென மகாத்மா கொண்டுள்ள சபதத்தை நாம் பூர்த்தி செய்வோமானால், அவருக்கும் நமக்கும் அழியாப் பெருமை யுண்டாகும். மனிதனுக்கு மனிதன் சமத்துவமாக இருப்பதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் சகல விஷயங்களையும், சகிப்புத்தன்மை யின்மையையும் ஒழித்துவிட வேண்டும். நமது லக்ஷியங்களான சுதந்தரம், நீதி இவைகளைப் பெறுவதற்கு முட்டுக்கட்டையாக இருப்பவைகளை அகற்றுவதில் சந்தேகம் வேண்டியதில்லை.



# மாதர் உலகம்




## பிராட்டியார்




(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)


—:(o):—


(208-ம் பக்கத் தொடர்ச்சி.)


"வரும் இவள்மாயம் வல்லாள் வஞ்சனை யரக்கி நெஞ்சம்
தெரிவிலள் தேறுந்தன்மை சீரியோய் செயலிற் றன்றால்
உருவிது மெய்யதன்றால் ஊனுகர் வாழ்க்கை யாளை
வெருவினேன் எய்திடாமல் விலக்குதி"

என இகழ்ந்தனள். இவைகளினாலேயே இவள் புல்லிய தன்மையை இராமன் உணர்ந்து சாலையை விட்டு அகலும்படி எச்சரித்து சந்திக் கடனாற்றச் செல்கின்றார். சூர்ப்பநகை, இப்பேரழகி இவன்பால் இருக்கு மட்டும் இவன் என்னை விழையான்; இவளை வெளவிச் செல்வேன் என்று எண்ணி முயல எத்தனிக்கையில் இவைகளைப் புறத்தேயிருந்து கவனித்துக் கொண்டிருந்த இலக்குவன் ஓடிவந்து வல்லரக்கியின் மூக்கு காது முதலிய உறுப்புக்களைக் கொய்து வீழ்த்தினான். சூர்ப்பநகை இதனையும் சகித்துக்கொண்டு அவர்களில் ஒருவருடனாகிலும் சுகிக்க நேர்ந்தால் போதுமெனப் பின்பும் முயன்றாள். ஒன்றும் பயன்படா தொழிதலின் வன்மம் கொண்டு கரதூஷண திரிசிரனாதியரைப் போர் செய்யத் தூண்டுகிறாள். கடல்போல் நெருங்கிய கரனாதியர் படை ஒரு முகூர்த்தத்தில் மாய்ந்தது; கரனாதியரும் மடிந்தனர்.

பிறகு இலங்கேசனிடம் சென்று தன்னைத் தாபதர் அவமானம் செய்ததையும் பிராட்டியின் பேரழகையும் விவரித்து அவ் வநிதையைக் கவரும்படி போதித்தாள். அதுவே அவன் வாழ்க்கையின் இறுதி ஓலையானமையினால் இனிதாக ஏற்று அதற்குரிய உபாயமாக மாமனாகிய மாரீசனிடம் சென்று அவனைக்கொண்டு இராமனைச் சீதையினின்றும் பிரிக்கும் உபாயம் செய்யத் தூண்டுகின்றான். இதன் மேல் விளைவாகிய மாரீசன் வருகைதான் பிராட்டியாரின் பெருஞ்சோதனையின் தோற்றுவாய். பொன்மானாகி வந்த உருவம் பிராட்டியின் மனதைக் கவர்ந்தது. அதன்மாட் டெழுந்த ஆசை அடக்க முடியாததாயிற்று. ஆகவே அதனைப் பற்றித் தரும்படி இராமனை மிகவும் வற்புறுத்தி வேண்டினார். இராமனுக்கும் எறக்குறைய பிராட்டியாரைப்

போலவே அம்மானின் அழகில் விருப்ப மெழுந்தது. இதனைக் கவிவேந்தர் வெகு பொருத்தமாக,

> "சேக்கையினரவு நீங்கிப் பிறந்தது தேவர் செய்த
> பாக்கிய முடைமையன்றோ அன்னது பழுதுபோமோ."

என ஆரம்பத்திலேயே சமாதானம் கூறுகின்றார். பொன்னால் இயல்பாகவே ஒரு மிருகம் புவியில் தோன்றுமா? என்பது இராமர் மனதில் படவேண்டியதிருக்க, இதனை மாயமென்றெண்ணி அறிவுறுத்திய இளவலையும் அசட்டைசெய்து அதனைப் பற்றவே முடிவு கொண்டு தொடர்ந்தனர் என்பது பேரறிவாளனாகிய இராமனுக்குப் பெருமை தராதென்பதைக் கவி யுணர்ந்தே தொடக்கத்திலேயே அவர் எந்தக்காரியத்திற்காகப் பிறந்தாரோ, அந்தக் காரியம் தேவகாரிய மாதலின் அது முடிவுறாது பழுதுபடா தென்று நினைவூட்டினார் போலும். பிரானுக்கே அந்த உருவத்தில் விருப்பம் ஏற்பட்டபோது பெண்மை யுடைய பிராட்டியாருக்கு அவ்விருப்பம் பெரிதா யிருந்ததில் வியப்புண்டோ? பிரான் விருப்பத்தினை விடப் பிராட்டியாரின் பெருவிருப்பமே ஈண்டு தேவகாரியத்தை முடித்து வைக்க ஏற்பட்ட தூண்டுகோலாகும். பிராட்டியார் விருப்பம் முற்றிப் பிணக்காக முடியும் பான்மை கண்டே இராமன் விரைந்து சென்றதும், தடுத்த தம்பிக்குப் போலிச் சமாதானம் புகன்றது மென்பதும் தெளிவே.

முன்னர் அயோத்தியில் மந்தரையினால் போதிக்கப்பட்ட கைகையின் மாசற்ற மனம் திரிவுற்றதற்குக் காரணமாகக் கவி இமையோர் மாயையின், அவர் பெற்ற நல்வர வுண்மையாலும், ஆயவந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும், தேவி தூயசிந்தையும் திரிந்தது எனக் கூறுகின்றார். இயற்கையான மனநெகிழ்ச்சியும் எண்ணியதை முடிப்பதில் பிடிவாதமும் ஆண்மக்களைவிடப் பெண்தன்மைக்கே பெரிதுண்டாதலின், தேவர்கள் தமது காரிய சித்திக்கேற்ற காரியாலயமாகப் பெண்கள் உள்ளத்தையே பெரிதும் கைக்கொள்ளுவதாக எண்ணவேண்டி யிருக்கிறது. இதன் பயனாகப் பின்பு இராமபாணத்தினா லடிபட்டு உயிர்விடு மாரீசன் சீதையை மயக்கவும் இலக்குவனைப் பிரிக்கவும் எண்ணி இராமர் அழைப்பதுபோற் பெயர் இட்டழைத்து மரித்தான். இராவணன் இராமனை மட்டில் பிரித்தல் போதுமென் றெண்ணினான். இராமன் இலக்குவன் இருவர்களின் வில்வன்மையையும் மாரீசன் வேள்விக்காலத்தில் நேரில் உணர்ந்தவ னாதலின் இலக்குவனையும் சாலையிலிருந்து பிரிக்க எண்ணி மாயத்தால் விளித்து ஆவி நீத்தான்.

அவ்வழைத்த குரல் கேட்ட பிராட்டியார் உண்மையாகவே இராமன் வீழ்ந்து பட்டதாகக் கருதினாரேயன்றி ஐயுறவுமில்லை. சேடனின் அவதாரமாகிய பேரறிவுடைய இலக்குவன் எவ்வளவு தூரம் தேற்றியும் அவர் சொல்லைத் தவறாக மதித்து அடாத சொற்களையும் இயம்பி இராமன் வீழ்ந்ததில் இலக்குவன் கவலையில்லாதவன் எனவே முடிவுசெய்து கொண்டு காட்டுத் தீயில் விழுவதாக விரைந்து பர்னகசாலையை நீங்கி செல்லலானார். கைகையுள்ளம் திரிந்தது போலவே பிராட்டியுள்ளமும் திரிந்ததெனக் கம்பநாடர் குறிப்பா லுணர்த்தியபடியே கொள்ளலும் கூடும். அன்றிப் பெண்கள் சாகஸத்திற்குச் சிறந்த பாத்திரங்கள் என்பதற்கு நல்ல உதாரணமாக உலகம் தூற்றவும் கூடும். எனினும் ஆண்பாலாரிலும் தருமன் நளன் என்று புகழ்பெற்ற

உத்தமவேந்தர்கள் தமது சற்குணத்திற்குச் சிறிதும் பொருந்த மற்ற சூதாட்டத்திற்கு இணங்கினர் என்பதை நோக்க,

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான் முந்துறும்."

என்ற பொய்யாமொழிப் புலவர் வாக்கின்படி பிராட்டியார் இதன் பயனாகத் தொடர்ந்து அநுபவிக்க வேண்டிய பீழைகள் உளவாதலின் அதனை யடைவிக்கச் செய்யும் ஊழ்வலி எல்லாவற்றினையும் தடுத்து முன்னேறிச் சென்று தன் கடமையில் வெற்றிபெற்றதென்பதே துணிபு. பின்னர் வியாசர் மகா பாரதம் வரைந்ததிலும் மனையாளை வைத்தும் சூதாடும் மனநிலைமை தருமனுக்கு வந்தது. பூர்வம் இராமன் பொன்மானுருவம் கண்டு ஐயுறாது தொடர்ந்துபற்றச் சென்ற மதிமயக்கத்திற்கு ஒப்பாயதென்றும், ஊழின் வலியினால் உணர்வு சிதைதல் இயல்பென்றும் எடுத்துக் காட்டுகின்றார். அரண் மனை நீத்து அடவிக்குப் புறப்படுகையில் தானும் உடன் வருவேன் எனப் பிடிவாதம் செய்த மைதிலியைத் தடுத்த இராமன் முடிவில் பிராட்டியின் உறுதி கண்டும்,

"அல்லபோத அமைந்தனை யாதலின்
எல்லையற்ற இடர் தருவா யென்றான்."

என எதிர்காலத்தில் எய்தும் பெருந் தொல்லைகளை எடுத்துக் காட்டுகிறார். தன் மனம் இசைவின்றியும் பிராட்டியை உடன்கொண்டு போந்ததும், மாய மான் விஷயத்தில் நாயகியின் வேண்டுகோள் விபரீதத்தினை யுண்டு பண்ணுமென அநுமானிக்கவுமில்லை, கொள்ளற்பாலதே எனவும் மனைவி கருத்தை (அன்பினால்) ஆமோதித்தார்.

எவ்வாறு நோக்கினாலும் காலதேவதையின் கற்பனையில் கண்ணிழக்காதவர்கள் இல்லை. எல்லாப்பற்றுகளையும் அறுத்த இருந்தவர்கட்கே அஃது எளிதாகும். நிற்க ஈண்டு, பிராட்டியார் தம் கொடுமொழிக்கும், செல்லா தொழியின் இறப்பர் என்கிற எண்ணத்திற்கும் அஞ்சி இலக்குவன் பெருந் துயர் கூர்ந்து பிராட்டியார் திருவடிகளிற் பணிந்து,

"அஞ்சுவதென்னை நீர்சொற்ற சொல்லை யான்
அஞ்சுவென் மறுக்கிலேன் அவலந் தீர்ந்தினி
இஞ்சிரும் அடியனேன் ஏகு கின்றனென்
வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ."

"போகின்றேன் அடியனேன் பொருந்தி வந்துகே
டாகின்ற தரசன்றன் ஆணை நீர்மறுத்
தேகென்றீர் இருக்கின்றீர் தனியிர் என்றுபின்
வேகின்ற சிந்தையான் விடைகொண் டேகினான்."

என்றும் இலக்குவன் தெளிந்த அறிவினையும் முன் யோசனையையும் கவி விளக்குகின்றார். இவ்விடத்தில் இலக்குவன் வாயிலாக் கவி காட்டும் நீதியின் நுட்பமே எவ்வெவரும் சிரத்தாலேற்கத் தக்கதாகும். என்னை; மகளிர் எத்துணை மனவுறுதியும் நல்லொழுக்கமும் நல்லறிவும் அமைந்தவராக விருப்

பினும் தற்காப்புக்கு உரிமையாளராக ஒருவரை ஏற்கவே வேண்டும். அவ் வாடவராகிய துணைவலியாளரை இகழ்ந்து அகற்றித் தனிமையில் இருக்க ஒரு போதும் எண்ணுதல் கூடாது. பிறர் துணைவலியின்றி நாமே ஏன் நம்மைக் காத்துக்கொள்ளுதல் முடியாதென ஒருகால் எண்ணுவரேல் அக்கணமே அவர்தம் பெண்மையின் பெருமை அழிந்து படும். தற்காலத்தில் ஒரு சிலர் சுயேச்சை யென்னும் பெயரால் இதற்குக் கால்கோள்விழா வியற்றவும் கருதலாம். ஆனால் அத்தகையார் கருத்தில் உயிரினும் சிறந்ததாய ஒழுக்கத்தினை ஓம்பும் எண்ணம் உயிர்த்திருக்க முடியாது. இருப்புப்பாதைப் புகைவண்டி பிரயாணத்தினால் சகிப்புக்குணமும், காபி பானக்கடைகளினால் எச்சிலை இகழாத இயல்பும் ஏற்பட்டது போலப் பெண்கள் தம்மைத் தாமே காத்துக் கொள்ளலாம் என்கிற விஷயத்தில் ஏற்படுத்திக்கொள்ளும் சுயேச்சையும், கற்பில் கூட தியாகபுத்தியை மேற்கொள்ளும் நிர்ப்பந்தத்தில் கொண்டு விடுமென்பதையே மேலே கண்ட கவி உணர்த்துகின்றது. தம்பியைக் காவலாக நிறுவினான் நாயகன். அந்நாயகனது உத்திரவை மறுத்துச் செல்லும்படி பணித்தார் பிராட்டியார்.

"அரசன்றன் ஆணைநீர் மறுத் தேகென்றீர் இருக்கின்றீர் தனியிர்
இதனால் பொருந்தி வந்து கேடாகின்றது."

எனத் தெளிவாகக் கூறியே செல்கின்றார். இத்தகைய செய்கையே பின்னர் பிராட்டியாரின் பெருந்துன்பங்களுக் கெல்லாம் அடிகோலியதாகின்றது. கேடு வரும் பின்னே மதி கெட்டு வரும் முன்னே என்பது உலகில் வழங்கும் பழமொழி. இம்முதுமொழி பிராட்டியார் அளவில் முற்றும் பொருத்தமாக முடிந்தது. இளவலை மனநோகப் பேசியதும், அவரது தூய பக்தியிலும் ஐயம் கொண்டதும், இராமன்மாட்டு தமக்கே அன்பு அதிகமென் றெண்ணியதும், தீயில் விழுவதாகக் கூறி ஏகியதும், தனிமையில் இருக்கத் துணிந்ததும், உத்தமப்பெண் தன்மைக் கொவ்வாதவைகள் ஆதலின் அவைகளின் தீய பலன்களே இராவணன் வரவா ஈ முடிந்த தென்பதில் இழுக்குண்டோ? தெய்வ மாண்பினரெனினும் நீதியிற் றவறுவரேல் அத்தவறுக்குரிய தீயபலனை அடைந்தே நலிதல் வேண்டும் என்னும் உண்மையையும் இந்நிகழ்ச்சி நமக்கு உணர்த்துகின்ற தென்பதை மறப்பதற்கில்லை. இதுவுமன்றி இருவினைப் பயன்களையும் எத்தகையினரிடத்தும் காலந்தாழ்க்காமல் எய்துவிக்கும் எல்லாம் வல்ல இயற்கைத் தெய்வத்தின் வல்லமையே வல்லமை என்று போற்றவும் இத்தகைய சம்பவங்கள் துணை செய்கின்றன.

அன்றியும் உடல் எடுத்தோர் கடவுளராயினும் "அவ்வுடலுக்கேற்ற ஊழ்வினை உடனுற்றன்றிப் போதரா"தெனத் தணிகைப் புராண ஆசிரியர் அருளிய பொன்மொழியும் புலன் கொள்ள வேண்டும். தவிர மனிதனாகப் பிறந்தவர்கள் அரிதாக ஒவ்வோர் சமயம் தவறிழைக்க நேருவதும் உலகியற்கை யென்பாரும் உளர். இனி பிராட்டியார் இலக்குவனை வள்ளல்பாற் செல்லும்படி ஏவிவிட்டு சாலையிற் றனித்திருந்து தமது நாயகனைப்பற்றிய கவலையுடன் மனவமைதியின்றி இருக்கின்றார். பிராட்டியார் பிடிவாதம் பொருளாசை பற்றியோ, வஞ்சத்தாலோ, சுயநலப்பற்றினாலோ எழுந்ததொன்றன்று. காதலன்மேல் வைத்த கரைகடந்த அன்பொன்றினாலேயே எழுந்ததென்பதை ஈண்டு வாசகர்கள் மறவாதிருத்தலே அறமாகும். அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்? என்றபடி பிராட்டியார் உள்ளங் குழைந்து கண்ணீர் வடித்

துக் கவலையுற்றிருக்கும் அவ்வமையம் இராவணன் முதிய தவசிவேடம் பூண்டு கோலூன்றி இவர் இருந்த சாலை மேவினன். வயது முதிர்ந்து தவக்கோலம் பூண்ட கோலம் வஞ்சனை யென்றுணராத எமதன்னையார் உண்மைத் தவத்தர் என எண்ணி உள்ளே வரும்படி அழைத்துத் தமது கண்களினீரைத் துடைத்துக் கொண்டு பிரம்பினுல் வனைந்த ஓர் ஆதனமளித்து இருக்கும்படி உபசரித்து இன்னுரை பகர்ந்தனர்.

கொடியோனுகிய அரக்கன் கள்ளமறியாத பிள்ளைக் குணமுடைய பிராட்டியை பெருவஞ்சம் செய்து கவர எண்ணி கபட சந்நியாசி வேடம் பூண்டு அவர் இருந்த சாலைக்குள் எய்தி தண்டு கமண்டலங்களாகிற சின்னங்களுடன் உட்கார்ந்தபோது தாவரங்களாகிய மரங்களும் பிறவும் நடுங்கின, வரைகளும் குலுங்கின, பறவைகளும் விலங்குகளும் அஞ்சின, பாம்புகளும் படம் குறைந்தொடுங்கின என்ருர் கவியரசர். வஞ்சத்திற் கஞ்சாதவை எவை? இப்பாதகன் மனமட்டில் பாவத்திற் கஞ்சவில்லை. அவன் வாழ்விழந்து தாழ்வுழந்து வாணுள் முடியும் காலம் நெருங்கியதினுல் போலும். அத்தகைய தசமுகன் ஒன்று மறியாதவனைப்போல இவ்விருக்கை எவருடையது? இதில் வசிக்கும் முனிவன் யார்? நீர் யாவர்? என வினவுகின்ருன். அதுகேட்ட பிராட்டியார் தயரத சக்கரவர்த்தியின் தவப்புதல்வன் குலமுதல்வன் தம்பியோடும் இதில் வசிக்கின்ருர். அவர் பெயர் நும்போன்ற அருந்தவர் கேட்டிருப்பீர் அன்ருே? என நாயகன் பெயரினை நவிலாமல் பாரத தேச மடநல்லாரின் பண்டைக் கால மரியாதை வழக்கின்படி குறிப்பாலுரைத்தார். இதனைக் கவிவேந்தர்,

> "தசரதன் ருெல்குலத்தலைவன் தம்பியோ
> டுயர்குலத் தன்னைசொல் உச்சி யேந்தினன்
> அயர்வில திவ்வழியுறையும் அன்னவன்
> பெயரினைத் தெரிகுதிர் பெருமையீர்"

என்னும் செய்யுளில் அமைத்துக் காட்டுகின்ருர்.

வஷிஷ்ட முனிவரரின் தலை மாணுக்கராகிய தமது நாயகனின் திருப்பெயரினை எவரே முனிவர்களில் கேளாதிருப்பர் என்பது பிராட்டியாரின் சொற்குறிப்பு. விசுவாமித்திரரின் வேள்வி காத்ததும், தாடகை வதமும், அகலிகை சாபவிமோசனமும், சிவதநுவின் பங்கமும், பரசுராம ஜெயமும், அகில உலகங்களும் அறிந்த பெருங் கீர்த்தி மாலைகளன்ருே? இத்தகைய வீரனை அறிஞரில் அறியாதாரும் இருப்பரோ? இரார் என்பது பிராட்டியார் நம்பிக்கையுமாகலாம். தவிர ஒரு சிறப்புமில்லாத நாயகன் பெயரையும் பாரத நாட்டுப் பெண்கள் கூறுவது வழக்கில் இல்லை. வயதிற் பெரியர்களாய் மரியாதைக் குரியவர்களாய் உள்ளவர்களின் பெயர்களையும் சொல்லத் துணிவு கொள்ளார். ஆனுல் தற்காலம் ஆங்கிலக் கல்வியின் பயனுக அன்னுர் நடையுடைகளில் ஆர்வம் பூணும் நம் நாட்டு நாகரிகர் பலர் மிஸ்ஸெஸ் கணபதி, மிஸ்ஸெஸ் ரங்கநாதன், மிஸ்ஸெஸ் சுப்பிரமணியம் எனத் தத்தம் நாயகர்கள் பெயரால் வெளிப்படுகின்றனர். தமக்கு இயல்பாகவே இடப்பெற்ற லெட்சுமி, பார்வதி, சரஸ்வதி, முதலிய பெயர்கள் மறைபட்டு மண்ணைக் கவ்விவிடுகின்றன. மகாத்மா தற்கால நாகரிகம் ஒரு நோய்க்குச் சமானமென்று எழுதியிருக்

கிறார். இது முற்றிலும் போற்றத் தக்க உவமையன்றோ? பெயரில்கூட சுதந்தர மிழந்தவர்களாய் இருப்பதையே அது குறிக்கின்றது. ஆனால் நாகரிக மாத்தில் ஏறிச் செல்லும் நங்கைமார்களும், அவர்களுக்கு வழி காட்டிகளாக வெளிவருபவர்களும் கூட இப்புது வழக்கத்தினைக் கைவிடல் தமக்குச் சிறப்பென எண்ணுவதாகத் தெரியவில்லை. இது நிற்க நமது பெண்ணின் அருங்கலமாகிய பிராட்டியார் கபட சந்நியாசியை உண்மைத் துறவியாக நம்பியதால் "பெருமையீர் தெரிகுதிர்" எனக் குறிப்பிட்டனர். வஞ்சகனும் அதை அங்கீகரித்ததன் போல,

"கேட்டனன் கண்டிலேன் கெழுவுகங்கை நீர்
நாட்டிடை யொருமுறை நண்ணினேன் மலர்
வாட்டடங் கண்ணினீர் யாடன் மாமகள்
காட்டிடை யரும்பகல் கழிக்கின்றீரென்று"

வினவுகின்றான். பால்போன்ற உள்ளமுடைய தேவியார்,

"அனகமா நெறிபடர் அடிகள் நும்மலால்
நினைவதோர் தெய்வம் வேறிலாத நெஞ்சினன்
ஜனகன் மாமகள் பெயர்ஜனகி காகுத்தன்
மனைவியான் என்றனள் மறுவில் கற்பினள்"

பிரம ஞானிகளின் மத்தியில் எப்போதும் பொலிந்து எப்பற்றுமின்றி விளங்கும் தமது தந்தையைப் பிராட்டியார் பெருமை தோன்றக் குறிப்பிடுகின்றார். பிறந்தகம் பெருமை தழைத்ததாயின் பெண்களுக்கு அதிலும் சிறந்த ஆனந்தம் வேறுண்டோ? பிறந்த குடியின் பெருமையாலன்றோ ஆயிழையார் பெருங்குணங்களால் மலர்ந்து மணங் கமழ்வதும்? அவ்வாறே ஜனகரின் பண்பைக் குறிப்பிட்டு அவர்தம் பெயரினாலேயே ஜனகி என்று தன் பெயரினையும் சுட்டுகின்றார். ஜனகரால் தமக்கிடப்பட்ட காரணவிடுகுறிப் பெயராகிய சீதை என்கிற நாமத்திலும் பாவமற்றவராகிய பிதாவின் பெயரால் அமைந்த ஜனகி யென்னும் நாமமே பிராட்டியாருக்கு உவப்பாயிருந்ததென்பதும் ஈண்டு விளக்க முறுகின்றது. அதன் பின்னர் புகுந்த குடிப்பெருமை விளங்க காகுத்தன் மனைவி யான் என்றனள். ககுஸ்தன் என்னும் சிறந்த மன்னவனின் வழி வந்தமையால் இராமனைக் காகுத்தன் என்பது மரபு. ஈண்டும் இராமனது பெயரினைக் குறிப்பிடாமலே அவர் பிறந்த குல முதல்வன் பெயரினாற் சுட்டினார். இவ்வாறு விடையளித்த பிராட்டியார் மூப்பினால் இளைத்த நீர் வருந்த வழிநடந்து எவ்விடத்திலினின்றும் இங்கடைந்தீர் என அக்கபடவேடத்தினனை எதிர் வினவினார்.

இதுவே தருணமென இடங்கண்ட பாதகன், இலங்கை வேந்தன் என்றொருவன் உளன். அவன் ஆண்மையும் வன்மையும் அளப்பில எனத் தனித்தனி புகழ்ந்து அவனுடைய அரசிருக்கையாகிற இலங்கையில் சில காலம் வசிக்க எண்ணி மாதவர்களைப் பிரிந்து போந்தேன் என விளம்புகின்றான். பிரமன் மரபில் பிறந்தவன், வேதமோதும் நாவினன், இந்திரனுக்கும் இந்திரன், கயிலையை ஊசிவேரோடும் பெர்த்தவன் என்பனவாதிய தன்னால் வெளியிடப்பட்ட சிறப்புக்களால் பிராட்டியார் மதிப்புக்குப் பாத்திரமாகலாம் இலங்கை வேந்தன் என எண்ணினான். பிள்ளையார் பிடிக்கக் குரங்காய் முடிந்

தது போல இராவணன் என்பதை யுணர்ந்த கணத்திலேயே பிராட்டியாருக்கு மனமாறியது. செல்வமும் சிறப்பும் பட்டமும் பதவியும் நல்லறிவுடையோரை எங்ஙனம் மயக்கும்? மன்னுயிர் தின்னும் மகா பாதகர் வைகும் நகரில் உடலையும் உணக்கித் தவம் செய்யும் நும்போல்பவர் உறைவது எதற்கு? தவத்தினர் வைகும் வனங்களில் வசிக்க விரும்பாமலும் நல்லோர் வாழும் நகரங்களில் உறையாமலும் தருமநெறி இன்னதென்றும் உணராத தீயர்கள் குழுவில் வசிக்க எண்ணினீர், அந்தோ? என்ன காரியம் செய்தீர் என இகழ்ந்து அஞ்சாது உசாவினர். இது கேட்ட அரக்கன் எழுந்த கோபத்தை ஒருவாறு வெளிக் காட்டாமல் உண்மையை நோக்குங்கால் அந்நிருதர் தேவர்களைவிடக் கொடியவர் அல்லர். அன்றியும் எம்போன்ற துறவியர்கட்கு அவ்வரக்கரே மிக நல்லவர்களாய் ஒழுகுவோர் என்று விடை பகர்ந்தான். பொய்வேடம் புனைந்தான் எனினும் பிராட்டியாரால் அலட்சியமாகத் தன் இனத்தினர் பேசப்பட்ட வகையினைப் பொறுக்க இயலாதவனாய் ஜாதி மானத்தால் தூண்டப்பட்டு நிருதரைச் சிறப்பிக்கவும் துணிந்தான். எனினும் தூயோர் தூயோரை நாடுவதல்லது தீயோர் இனம் சேரார் என மீட்டும் தடுத்துரைத்தார். ஆயினும் வேண்டிய எந்த உருவங்களையும் எய்துவர் அரக்கர் என்பதை மனங் கொள்ளாமலே இச் சம்பாஷணையில் வெறுப்புற்றனர்.



# உலக அநுபவம்

(கி. பாலசுப்பிரமணியம், M. A.)

பானைக்கொரு காலம் பூனைக்கொருகாலம் என்பது தீண்டாதார் என்பவர்களுடைய விஷயத்தில் உண்மையாய்விட்டது. மகாத்மா அவர்கள் விஷயத்தில் எவ்வளவு ஆதரவுடனிருக்கிறார். அவர் இப்போது செய்யவிருக்கும் தியாகமானது, தீண்டாதாரை உலகப் பிரசித்தமாக்கிவிட்டது. பிரசித்தமாக்குவதற்காக அவர் செய்யவில்லை. இவர்கள் பரிதாபநிலைமை நம் நாட்டிலேயே அனேகருக்குத் தெரியவில்லை. இவர்களுக்கும் அன்னிய நாட்டினருக்கும் இவர்களுடைய விஷயத்தில் உணர்ச்சி ஏற்படவேண்டும். நமது தேகத்தில் ஒரு பாகம் அசுத்தமாகவோ அசௌக்கியமாகவோ விருந்தால் அதை முதலில் சுத்தமோ சிகிச்சையோ செய்யவேண்டும். இதை மூடி மூடி வைத்துவிட்டு எல்லாம் சரியாகவிருக்கிறதென்று நெருப்புக்கோழித் தன்மையாயிருப்போமானால் நாளடைவில் வியாதி பெருகிவிடும். ஏற்கனவே தீண்டாமைப்பேயின் அட்டகாசம் அதிகமாயிருக்கிறது. இப்போதாவது இதன் கொட்டத்தை யடக்கிவிடாவிட்டால் வெகு சிரமமாய் விடும். ஆகவே, மகாஜனங்கள் இவ்விஷயத்தில் கருத்துடன் வேலைசெய்து அறியாமையினால் செய்யும் அக்கிரமங்களை ஒழித்து, தீண்டாதார் என்று ஒரு பிரிவை யுண்டாக்காமல் அவர்களை நமது கோவில்கள் குளங்கள், வீதிகள், வீடுகள் முதலிய இடங்களுக்குத் தாராளமாய் வரவிடவேண்டும். நம்மைவிட அவர்கள் எந்தெந்த விஷயத்தில் தாழ்ந்தவர்களோ அவற்றில் புத்தி புகட்டி முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்.

தீண்டாதவர்கள் வேறு மதத்திற்குள் புகுந்துவிட்டால் அவர்களோடு சமத்துவம் பாராட்டுகிறோம். ஆதிதிராவிடன் கிறிஸ்தவனோ மகம்மதியனோ ஆகிவிட்டால் அவன் நம்மோடு தாராளமாய்ப் பழகலாம். இதன் காரணமென்ன? அந்த மதங்களுக்கிருக்கும் சக்தி நம்முடைய மதத்திற்கில்லையா? அவை புனிதனாக்கும்போது நமது மதம் ஏன் செய்யமுடியாது? எவ்வளவு பாபங்கள் செய்தாலும் கங்கா, யமுனா முதலிய புண்ணிய நதிகளில் ஸ்நானஞ் செய்தால் அவை விலகிப்போகுமென்றிருக்கிறதே. இந்நதிகளுக்கும் இத்தீண்டாதாரைப் புனிதமாக்கச் சக்தியில்லையா? மந்திரமாவது நீறு என்கிறீர்களே. அந்த நீருக்கும் சக்தி யில்லையா? இவற்றிற்குச் சக்தி யில்லை, நமக்கு இத்தீண்டாதாரை சேர்த்துக்கொள்ள மனமில்லையாவென்பதை அன்பர்கள் யோசிக்கவேண்டும். இது வரையிலிருந்தது எப்படிப்போனாலும் போகட்டும். இனிமேலாவது நாம் இவ்வனாதைகளிடம் மனமிரங்கி அவர்களை ஏற்றுக் கொண்டு ஆதரிக்கவேண்டும்.

கடவுளை நாம் தொழுவதும் காலையிலும் மாலையிலும் ஜபம் செய்வதும் எதற்காக? அதில் ஏதோ ஒரு பிரயோஜனமிருக்கிறதென்பதற்காகவே. சிறு

வயது முதற்கொண்டே நமக்குக் கடவுள் இருக்கிறுரென்ற உணர்ச்சி யுண்டா கிறது. ஒவ்வொரு தேசத்திலும் ஒவ்வொரு காலத்திலும் கடவுளைத் தொழா தவர் கிடையாது. இப்பிரபஞ்சத்திற்கு ஒரு காரணமிருக்க வேண்டுமென் றும் அக்காரணமே கடவுளெனவும் கூறுகிறுர்கள். கடவுளில்லையென்னும் நாஸ்திகரும் இக்காரணத்தை ஒப்புக் கொள்ளுகிறுர்கள். அவர்கள் அதன் பெயர் கடவுளில்லை இயற்கையென்கிறுர்கள். இதுதான் வித்தியாசம். ராமதீர்த்தர் ஒரு பிரசங்கத்தில் இதற்கு ஒருதாரணம் கூறியிருக்கிறுர். மூலாம்பழம் ஒன்றை மூன்று சிறுவர்கள் பார்த்தார்கள் — ஆங்கிலேயன்' ஹிந்தி பேசுபவன், தமிழ் பேசுபவன் ஆகிய மூவர். ஆங்கிலேயன் அது வாடர் மெலன் (Water Melon) என்றுன். ஹிந்தி பேசுபவன் அதை 'தர்பூஜ்' என் றும், தமிழன் மூலாம்பழமென்றும் சொன்னுர்கள். மூவருக்கும் தர்க்கமுண் டாயிற்று. கடைசியில் வேறொருவன் வந்து மூன்று பெயரும் ஒன்றையே குறிக்கிறதென்று சொல்லி சமாதானப்படுத்தினுனும். அது போல் நாஸ்தி கர்கள் "கடவுளில்லை ஆனுல் இயற்கைதான் பிரபஞ்சத்தின் காரண"மென்று கூறுவதால் இயற்கைக்குக்காரணமென்னவென்று சொல்லக் கடமைப்பட்ட வர்களாகிறுர்கள். இப்படி போய்க்கொண்டிருந்தால் முடிவேற்படாது. ஏதோ ஒரு பரம்பொருள்— "ஏகம் சத்; விப்ரா பகுதாவதந்தி"யென்று சொல் வதுபோல் (சத்து ஒன்றுதான். அதைப் பண்டிதர்கள் பலவாறுகச்சொல்லுகி றுர்கள்)— இருக்கிறதென்பதை எல்லோரும் ஒத்துக்கொள்ளுகிறுர்கள். இக் கடவுளுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? சம்பந்தமிருக்கிறதா இல்லையா? அவர் நமக்குச் சினேகிதரா எதிரியா?

கடவுளுக்கும் நமக்கும் சம்பந்தமே இல்லாவிடில் நாம் அவரைப்பற்றி சிந்திக்கவே மாட்டோம். அவர் இருந்தாலும் இல்லாவிட்டாலும் ஒன்றுதான். ஆகையால் ஒருவிதமான சம்பந்தம் இருக்கத்தான் வேண்டும். அவர் நமக்கு எதிரியா சினேகிதராவெனில், எதிரியா யிருப்பின் நாம் அவருக்குப் பூஜை கள் செய்வதால் பிரயோஜனப்படாது. விரோதம் பாராட்டுபவனுக்கு நாம் எவ்வளவு நன்மை செய்தாலும் அவன் மனமிரங்காது. இரங்கினுலும் நம் மீது அவனுக்கு நம்பிக்கையுண்டாகாது. கடவுளும் அப்படியே நம்மிடம் பராமுகமாயிருப்பார். ஆகவே அவர் நம்மிடம் பிரீதியுடையவராயிருத்தல் வேண்டும். ஆனுல் அவர் நம்மிடம் ஏதேனும் எதிர்பார்க்கிறுரா? அன்று அன்று. கீதையில் பகவான் எனக்குச் சித்தியாக வேண்டியதொன்றுமில்லை. இருந்தாலும் நான் உழைக்கிறேன். நான் உழைக்காவிட்டால் உலகம் நாச மாய்ப்போய் விடும். ஜனங்கள் என்னைப் பார்த்துத் தாமும் சும்மாயிருந்து விடுவார்கள்" என்கிறுர். கைம்மாறு எதிர்பார்க்காமலே அவர் உலகத்திற்காக உழைத்து வருகிறுர். நமக்கு வழிகாட்டும் பொருட்டும் உற்சாகப்படுத்தும் பொருட்டும் அவர் உழைக்கிறுர். நாம் ஏன் உழைக்கவேண்டும்? இவ்வளவு உழைத்தும் ஒரு பிரயோசனமுமில்லாமல் கடைசியில் ஒரு பிடி சாம்பராய் விடுகிறுேமே. நாம் உழைப்பது எதற்காக. இவ்வுலகமே மாயை. அதில் உள்ள யாவும் மாயையாயிற்றே நாம் ஏன் இந்த மாயை யுலகத்தில் பின்னும் பின் னும் மாயைச் செய்கைகளைச் வேண்டும்? உதாரணமாக, நாம் சும்மாவிருப்ப தாக வைத்துக்கொள்வோம். சிறிது நேரத்தில் பசியெடுக்கிறது. பிச்சை யெடுத்தாவது திருடியாவது சாப்பிட வேண்டியிருக்கிறது. பிச்சையெடுப் பதும் திருடுவதும் தொழிலே. வேலைசெய்யாமல் இருக்கமுடியாது. எது மாயையாயினும் பசிமாத்திரம் மாயையல்ல யென்று சொல்லலாம். அந்தப்

பசியை நீக்க நாம் செய்யும் தொழிலும் மாயையல்ல. வெகு வெகு உண்மை யானதே. உண்பதும் மாயையல்ல. ஏனெனில் சமையலில் ஏதேனும் பழு திருந்தாலும் நமக்குக் கோபம் வந்து விடுகிறது. இதுவும் மாயையல்ல கோபமும் மாயையல்ல. அச்சமயம் நாம் செய்வதின்னதென்பதே தெரிவ தில்லை. சாப்பிட்ட பின் தூக்கம் வருகிறது. இத்தூக்கம் மாயையா? அதன் அவசியத்தைத் தூக்கம் வராமல் திண்டாடுபவரைக் கேட்டால்தான் தெரியும். ஓரிரவு ரயில் பிரயாணஞ்சென்று கூட்டமிருப்பதால் தூங்காம லிருந்தால் அந்த சுகமே வேறு. ஊண் உறக்கம், வேலையொன்றும் மாயையல்ல. எல்லாம் உண்மையே. வேலை செய்வது நல்ல உணவிற்கும் உறக்கத்திற் குமே. நாம் கஷ்டப்பட்டு வேலை வேலை செய்யாவிட்டால் சம்பாதிக்க முடி யாது. சம்பாதித்தால்தான் நல்ல உணவும், வாசஞ்செய்ய, தூங்க நல்ல வீடும் கிடைக்கும். நாம் வேலை செய்யும் உத்தியோகசாலை அதிலிருக்கும் மற்றைய உத்தியோகஸ்தர்கள் மாயையல்ல. உலகமே மாயையல்ல! இங்கிருக்கும் பிணியும், அவஸ்தையும், திண்டாட்டமும் மாயையாகுமோ? எல்லாம் உண்மை யாகத்தானிருக்க வேண்டும். இவையெல்லாம் "நோகாமல் அடிக்கிறேன். ஓயாமல் அழு" என்பதுபோல் விளையாட்டல்ல. சாதாரணமாக வைசூரி, காலரா முதலிய பிணிகள் ஊரில் புகுந்து நூற்றுக்கணக்காக மனிதர் இறக் கும்போது "அம்மன் விளையாட்டு" என்று சொல்லுவார்களாம். அம்மன் விளையாட்டே இப்படி யிருந்தால் அம்மனுடைய கோபம் எப்படி இருக்குமோ? இவ்வுலகம் மாயையாயின் உண்மை உலகம் எப்படி இருக்குமோ!

நிற்க, நமக்கும் (அதாவது உலகமாந்தர்களுக்கும்) உலகத்திற்கும் என்ன சம்பந்தம்? நாம் இவ்வுலக வாசிகளாயிருப்பது வாஸ்தவந்தான். ஆயினும் இதற்கு முன் நாம் (மனித கோஷ்டி) எங்கிருந்தது? இவ்வுலகத்திற்கு வேறு இடத்திலிருந்து வந்தோமா? இவ்வுலகத்திற்கும் நமக்கும் விரோதமா சினே கமா? நாம் வேறு உலகத்திலிருந்து இங்கு வந்ததாக வைத்துக்கொள்வோம். அவ்வுலகத்தை விட இவ்வுலகத்தின்மேல் நமக்கு அதிக பற்றிருக்கவேண்டும். சாதாரணமாக நமக்கெதிரே ஒரு வஸ்து இருக்கிறதென்றால் என்ன அர்த்தம்? அதை நாம் நம்முடைய கண்களால் பார்க்கிறோம். அதுபோல் உலகமிருக்கி றதென்றால் நம்மைப்போல் பகுத்தறிவுள்ள பிராணிகளால் பார்க்கப்படுகிற தென்று அர்த்தம்.

(தொடரும்.)

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நெம்பர் தெரியாத வர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த் துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# தீபாவளியின் திண்டாட்டம்.

(ஆரியூர்-வ. பதுமநாப பிள்ளை.)

சகோதரிகளே! சகோதரர்களே! சிறுவர்களே! சிறுமிகளே!! சுதந்தர இன்பம் நீங்கி நாட்டில் அடிமைத் துன்பம் ஓங்கி யிருந்தாலும்—செல்வமும் கல்வியும் மற்ற பல்வளங்களும் மிக மிகக் குறைந்துபோய் விட்டிருந்தாலும்—உணவைப்பற்றிய கவலை சிறிதுமின்றி உல்லாஸமாகப் பொழுது போக்கிக் கொண்டிருந்த காலம் போய், கேவலம் வயிற்றை வளர்ப்பதற்காக எத்தகைய ஈனத்தொழில்களையும் மானமின்றி மேற்கொள்ளப் பற்பலர் துணிவு கொண்டுவிட்டாலும்—வாழ்க்கையில் பலருக்கும் உற்சாகம் இல்லா தொழிந்தாலும்—இன்றளவும் நமது நாட்டில் பண்டிகைகளுக்கு மட்டும் குறைவில்லை யல்லவா? ஒரு வருஷத்திற்குள் தமிழ்நாட்டு முக்கிய பண்டிகைகள் இரண்டு டஜனுக்கு குறையாமல் இருந்தாலும், தீபாவளியின் தனிப் பெருஞ் சிறப்பு எந்த பண்டிகைக்கேனும் உண்டோ? உங்களது மானதக் கடையில், ஒரு தராசை சிருஷ்டித்துக் கொள்ளுங்கள். அத் தராசின் ஒரு தட்டில் தீபாவளியையும், மற்றொரு தட்டில் மற்றெல்லாப் பண்டிகைகளையும் வைத்து நிறுத்துப் பாருங்கள். (அதாவது, சீர்தூக்கிப் பாருங்கள்.) அவற்றுள் எந்த தட்டு கனத்தின் (வீசை—மணங்கு என்ற அளவைக்கொண்டு விடாதீர்கள்; 'கனவான்' என்ற சொல்லை நினைத்துக் கொள்ளுங்கள்.) மிகுதியால், கீழே தாழும் என்று நினைக்கின்றீர்கள்? தீபாவளித் தட்டே தாழும் என்பதை உங்களால் மறுக்க முடியுமா?

'தீபாவளி' என்ற பதார்த்தத்திற்கும் (கத்தரிக்காய், வாழைக்காய் என்று நினைத்து விடாதீர்கள்! பத=சொல், அர்த்தம்=பொருள்—அதாவது 'சொற்பொருள்' என்று—பிரித்துப் பொருள் செய்து கொள்ளுங்கள்.) இக்காலத்தில் நமது நாட்டினர் அதைக் கொண்டாடுவதற்கும் எத்தகைய சம்பந்தம் இருக்கிறது தெரியுமோ? 'அமாவாசைக்கும் அப்துல் காதருக்கும் என்ன சம்பந்தம்?' அத்தகைய சம்பந்தம்தான் தீபாவளியை முன்னோர் கொண்டாடியதற்கும் இக்காலத்தினர் கொண்டாடுவதற்கும் இடையில் இருப்பது! தீப=விளக்கின், ஆவளி=வரிசை—அதாவது விளக்கின் வரிசை (இன்னும் விளக்கின்) ஆண்டவனது அருட்பெருஞ் சோதியை நினைவூட்டுமாறு சுடரொளி விளக்குகளை அணிபெற (வரிசையாக—அழகாக) ஏற்றி—இறைவனைப் போற்றி—அகத்துயர் மாற்றி ஆனந்தம் அடைவதற்கு உரிய திருநாளாக ஏற்படுத்தப்பட்டதே தீபாவளிப்பண்டிகை! அறிந்து கொண்டீர்களா அம்பல ரகசியத்தை! இவ்வரிய தத்துவத்தை இவ்வருஷத் தீபாவளி யன்று எவ்வளவு தூரம் கவனித்து நடந்துகொள்ளப் போகின்றீர்கள்?

'தீபாவளி' என்றால், புத்தம் புதிய புடவைகள் கட்டிக்கொண்டு களிக்க வேண்டிய நாள் என்பது மாதர்கள் எண்ணம். படாசுக் கட்டுகள் கொளுத்

திக் குதூகலிக்க வேண்டிய தினம் என்பது சிறுவர்கள் நினைவு; தாராளமாகக் குடித்து விட்டுக் களிக்கூத்தாடுவதற்கு ஏற்றநாள் என்பது மது பக்தர்கள் மனக் கிடக்கை; மாமியார் வீட்டு இன்பத்தை இனிது அனுபவித்தற்கு உரிய பண்டிகை என்பது புது மாப்பிள்ளைகளின் எண்ணம்! ஆனால், தீபாவளி எல்லோருக்குமே இன்பகரமாகக் கழிந்து விடுகிறதா என்பதைச் சிறிது சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

எச்சிற் கையால் காக்காய் ஓட்டவும் மனந்துணியாத மாப்பிள்ளை ஒருவர் சொந்த வீட்டில் இருந்தால், தீபாவளிக்கு முன்னும் பின்னும் எவரெவர் தம்மிடம் வந்து தொந்தரவு செய்வார்களோ என்ற அச்சத்தால், தீபாவளிக்கு இரண்டு வாரங்களுக்கு முன்பாகவே மாமியார் வீட்டிற்கு வந்து சேர்ந்து விட்டார். கலியாணமாகி ஐந்து வருஷ ககலமாக—ஒரே அருமை மகளின் க்ஷேமத்தை முன்னிட்டு—மாப்பிள்ளைக்கு அவ்வப்போது நோட்டுகளாகவும் ரூபாய்களாகவும் சன்மானங்களாகவும் செலுத்தி வந்த காணிக்கைகளால், பெண்ணின் தகப்பனார் 'இன்சால்வெண்ட்' மனு கொடுக்கும் நிலைமைக்கு வந்து விட்டார். அத்தகைய நிலையில், ஐந்தாவது தீபாவளி கொண்டாடுவதற்கு (!) மாப்பிள்ளை வந்து குந்திக் கொண்டார். அவருக்கு உயர்ந்த சரிகை வேட்டிகளும் சட்டைகளும் சமர்ப்பிக்க வேண்டுமே! பாவம்! ஏழை மாமனார் என் செய்வார்? நாடோறும் நான்கு வேளைகளிலும் நாவுக்கினிய நானாவித உணவுகளை உண்ணும் நேரமும்—உண்ட களைப்புத் தீர உறங்கும் நேரமும் தவிர—மற்ற நேரக்தில் மாப்பிள்ளைக்கு என்ன கவலை! எவ்விதக் கவலையுமின்றி அவர் திண்ணையில் ஊர்வம்பளப்பவர்களோடு உற்சாகமாக சீட்டாடிக்கொண்டிருக்க, வீட்டிற்குள் மாமனார் கைச் செலவுகட்குப் பணம் கிடைக்காத திண்டாட்டத்தினாலே—'தீபாவளிச் செலவுகளுக்கு என்ன வழி' என்னும் ஏக்கத்தினாலே பீடிக்கப்பட்டவராய்—இருகைகளையும் தலையில் வைத்துக்கொண்டு கவலைக்கடலில் ஆழ்ந்து விடுகிறார்!

மாதம் முப்பது ரூபாய் சம்பளத்திலுள்ள எளிய குமாஸ்தா ஒருவர்; இரண்டு பிள்ளைகளுக்கும் மூன்று பெண்களுக்கும் தகப்பனார். குடியிருப்பதும் குடிக்கூலி வீட்டில். முப்பது ரூபாய்க்குள் குடிக்கூலியும் கொடுத்து குடும்பச் செலவையும் நடத்தி தனது சொந்தச் செலவுகளையும் அடக்கிக் கொண்டுவிட வேண்டும். வருஷம் முந்நூற்றறுபது தினங்களிலும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்க நேர்ந்தாலும், தீபாவளியொரு தினத்திலாவது சந்தோஷமாகப் பொழுது போக்கவேண்டும் என்பது அவரது பேராா்வம். வருஷத்தில் ஒருமுறை வரும் திருநாளாகிய தீபாவளி யன்றாவது தனது கவலைகள் அனைத்தையும் கடவுளிடம் ஒப்புவித்து விட்டு, அவரை நிர்மல மனத்துடன் துதித்து ஆனந்திக்க வேண்டும் என்பது அவரது நீண்டநாளைய வேட்கை. ஆனால், அன்று அவர் மனையில் நடப்பதென்ன? "என்றைக்குப் பார்த்தாலும் இந்த தரித்திரம்தான்! கொண்டவள் நல்லவளாக இருக்கிறதால், அண்டை வீட்டு அபிராமி 'கோகர்ஜான் பட்டுச்சேலை' வாங்கிக் கொண்டு கும்மாளம் போடுகிறாள்! அவளெதிரில் நிற்கவே எனக்கு அவமானமாக இருக்கிறது! வருஷத்தில் ஒரு நாளாவதும் நல்லதாய் ஒருசேலை வாங்கக்கூட கதியில்லாத நீயும் ஒரு ஆண்பிள்ளையா? உனக்குப் பெண்டாட்டி ஒரு கேடா? பிள்ளை ஒரு கேடா? தரித்திரக் கசுமாலம்! பொழுது விடிஞ்சா, பொழுது போகிற வரைக்கும் இந்த வீட்டில், தலைவிதி யென்று கடமைக்கு உழைக்க வேண்டியதுதான்! நித்த நித்தம் உனக்கு ஆக்கி ஆக்கிக் கொட்டி

என்ன கண்டேன்?''—என்று காலையிலேயே கண்களில் நீர் பெருகி வழிய ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விடுகிறாள் மனைவி! கணவன், 'செவி கைப்பச் சொல் பொறுக்கும் பண்புடையவ'னாக இருந்தால், அது வாய்ச்சண்டையுடன் முடிந்து விடும். அத்தகைய பொறுமை இல்லாதவனாக இருந்தால், தீபாவளியின் மூலகாரணமாகிய நரகாசுர—கிருஷ்ண யுத்தம் அன்று அவ்வீட்டிலேயே நடிக்கப்படும்!

தீபாவளி பண்டிகைக் கொண்டாட்ட உரிமை, ஆண்சாதி—பெண்சாதி என்னும் இரு சாதியினரில் எவருக்கு அதிகம் உண்டு? மனையில் மகிழ்ச்சி ததும்பச் செய்யக் கூடியவர் எவர்? மனைவியே யன்றோ! 'மனைவி' என்னும் சொல்லே அதை வலியுறுத்துவதாக இல்லையா? அத்தகைய மனைவிக்கே அவ்வுரிமையில் முக்கால் ஏன்?—முக்காலே மூன்று வீசம் பங்கும் உரிய தல்லவா? அன்று, சத்யபாமா தேவி வில்லையை எடுத்து கணையைத் தொடுத்து எதிரியின் மேல் விடுத்ததனா லன்றோ, 'தீபாவளி' பெண்தெய்வத்தின் பெரு வெற்றியைக் கொண்டாடும் திருநாளாயிற்று! அக்காலத்தில், அவ்வாறு சத்யபாமா தேவி அரக்கன் செருக்கை அடக்கி வீரமங்கையாக விளங்கியதுபோல், இக்காலத்திய மாதுசிரோமணிகள் தமது கணவர் மீது சொல்லம்புகளைப் பொழிந்து வாய்ப்போரிலாவது தாங்கள் வீரமங்கைகளாக விளங்குவதைக் காட்டிக் கொள்வதற்காக அவர்களை தூற்றுவதா? அல்லது போற்றுவதா? தீபாவளியன்று தனது கணவனது மானத்தைக்காக்க பாமாதேவி வெற்றி குறிக்கொண்டு விற்போர் செய்ததை இன்றும் கொண்டாடுவதென்றால், இன்று மற்ற மாதர்கள் கூட்டத்தில் தன் கணவனது 'மானத்தைக் காக்க விரும்பும்' பெண்மணி, சேலை குறிக்கொண்டு சொற்போர் செய்வதை ஏன் பழிக்கவேண்டும்? விற்போராயினும் சொற்போராயினும், ஏதேனும் ஒரு போரின் கொண்டாட்டந்தானே தீபாவளி! வில்லம்புகளைக் காட்டிலும் சொல்லம்புகள் கொடியன வன்றோ!

நெருங்கிய உறவினர் எவரேனும் இறந்து விட்டிருந்தால், அதன் காரணமாக தீபாவளி பண்டிகை கொண்டாடுவதற்கின்றி—அத்திருநாளில் சமீபத்தில் இறந்தவர்களை நினைந்து நினைந்து துயரம் மிகுந்திடும் பெண்மணிகள் சிலர் காலையிலேயே ஒப்பாரி வைத்துப் புலம்பத் தொடங்கி விடுவது வழக்கம். ஆண்டாண்டுதோறும் அழுது புரண்டாலும், மாண்டார் மீண்டு வருவதும் உண்டேயோ? அதை அறிந்தும் அறியாதவர்களைப் போல் சில மாதர்கள், தாங்கள் பற்பல நாட்களாக கற்றுக்கொண்டு வந்த ஒப்பாரியை யெல்லாம் தாராளமாக வெளியிட்டுப் பாடக் கூடிய சந்தர்ப்பம் எப்பொழுது வாய்க்குமோ என்று நீண்ட நாட்களாக எதிர்பார்த்து வந்தவர்களாதலால், அவ்வொப்பாரிக் கண்ணிகளுள் ஒன்றையும் விடாமல் வாய்விட்டுப் பாடித் தீர்ப்பதற்கு உரிய நாளாக தீபாவளியையே தேர்ந்தெடுத்துக் கொள்வதும் உண்டு. (கண்களில் மட்டும் ஒரு சொட்டு ஜலமும் வராமல், எவ்வளவு நேரமாயினும் சலிப்பின்றிப் 'புலம்பிக்' கொண்டிருக்கக்கூடிய அரிய சக்தி வாய்க்கப் பெற்றவர்களான மாதர்களும் பலர் உண்டு!) அவ்வாறு, தமது கணவர் தீபாவளியன்று எவ்வித இன்பமும் காண்பதற்கு வழியின்றி திண்டாட வைத்துவிடும் பெண்மணிகள், தமது கருமத்தில் மட்டும் கருத்து ஊன்றியிருக்கத் தவறிவிட மாட்டார்கள். தீபாவளிக்காக வாங்கவேண்டிய புதுப்புடவையை, 'இறந்தவர்களுக்குப் படைப்பதற்காக வேண்டும்' என்னும் சாக்கு வைத்துக்கொண்டு வாங்கிக்கொண்டு

விடுவார்கள். பண்டிகைக் கொண்டாட்டத்தை நிறுத்தி விடுவதால், தீபாவளியன்று அம்மாதர்கள் செய்யவேண்டி வரும் விசேஷ வேலைகளின் சிரமமும் அவர்களுக்கு ஏற்படாதொழிந்து விடுமன்றோ ?

செல்வர்கள் வீட்டில், 'தீபாவளி' என்ற சொல்லைக் கேட்கும்போதே எல்லோர்க்கும் நாக்கில் நீர் ஊறும். அன்று தயாரிக்கப்படும் பட்சணங்கள் எத்தனை தினுசுகள் ! மாமூல் வழக்கத்திற்கு விரோதமாக—அதிகாலையில் சுகமான நித்திரையைத் தியாகம் செய்ய நேர்ந்துவிடுகிறதே என்ற ஒரு கவலையையன்றி, அச் செல்வர்கட்கு தீபாவளியன்று வேறு என்ன கவலை ! எளியவர்கள் வீட்டிலோ, பலகாரங்களென்னும் பல ஆகாரங்களுக்கு வழி இல்லாவிட்டாலும், இட்லி, தோசை என்னும் சாதாரண பலகாரங்களாவது இல்லாதிராது. ஓலைக் குடிசைகளில் வசிக்கும் 'தீண்டத் தகாதவர்கள்' என்னும் ஒதுக்கப்பட்டவர்களுக்கு அரிதில் அரிசி கிடைத்தாலும், அவர்கள் இட்டிலிப் பாத்திரத்திற்கும் தோசைக் கல்லுக்கும் எங்கே போவார்கள்? கேழ்வரகு அடையே அவர்கள் கண்ட அருமையான பலகாரம் ! அத்தகைய ஏழைத் 'திருக்குலத்தார்' (எக்குலத்தாரோ என்று பிரமித்துவிட வேண்டாம்; விசிஷ்டாத்வைத சித்தாந்த பரமாசார்ய ச்ரேஷ்டரான பகவத் ராமாநுஜாசார்யரே ஆதித்திராவிடர்களுக்கு அளித்தருளிய சீரிய திருக்குலப் பெயரே அது !) தீபாவளியன்று காலையில், தங்கள் கிராமத்திலுள்ள பெரிய சம்பத்துக்காரர்கள் (மிராசுதாரர்கள்) இரண்டொருவர் வீடுகளுக்கு—அதாவது வீடுகளின் எதிரில்-சென்று நின்று "சாமீ! சாமீ !" என்று தங்களது 'ஆண்டைக' (எஜமானர்க)ளைக் கூவி நிற்பார்கள். புண்ணிய தினமாகிய தீபாவளியில் 'பஞ்சமர்க'ளோடு பேசிவிட்டால், 'பறைத் தீட்டு' பற்றிக் கொண்டுவிடும் என்பது, உள்ளே உண்டு உடுத்துக் களித்திருக்கும் எஜமானர்களின் எண்ணம் ! ஆதலால், வருஷம் முழுவதும் எவர்களது இடையறாத உழைப்பின் பயனாக பெரும் வருவாயைப் பெறுகிறார்களோ, அவர்களை வருஷத்தில் ஒரு நாளிலேனும் திருப்திப்படுத்தியருள திருவுள்ளம் கொள்ளக்கூடிய கருணை, மிராசுதாரர்கட்கு தீபாவளியன்றுகூட உண்டாவதில்லை ! ஏன்? "பஞ்சமர்கள் உழைப்பதற்காகவே பிறந்தவர்கள் ! தாங்கள் அனுபவிப்பதற்காகவே அவதரித்தவர்கள் !"—இத்தகைய எண்ணமே அவர்களது அகத்தினின்றும் அருளை அகற்றிவிடுகிறது ! முடிவில் விளைவது என்ன?

அவ் வெளியவர்களுக்குச் சில தோசைகளை எடுத்துக் கொண்டு போய்க் 'கிள்ளித் தெறித்து' வருமாறு வேலைக்காரனுக்குக் கட்டளை இடப்படுகிறது ! அவ் வேலைக்காரன் எடுத்துச் செல்வதோ பத்தே தோசைகள் ! தெருவில் திரண்டு நிற்பவர்களோ சுமார் ஐம்பது அறுபது பேர்கள் ! அவர்களுக்குள் முன்னால் நிற்பவர்கள் பலசாலிகள் ! பின்னாலோ, கிழவர்களும் பெண்களும். அவர்களுக்கு ஏதேனும் கிடைக்கக்கூடுமானால், பலசாலிகள் மனங்கொண்டால் மட்டுமே கிடைக்கும் ! வேலைக்காரனே தோசைகளைப் பல துணுக்குகளாக்கி அவர்களிடையே எறிந்துவிடுகிறான் ! தெரு மண்ணில் விழும் அத்துணுக்குகளை, ஒருவரையொருவர் மிதித்துக் கொண்டும் தள்ளிக்கொண்டும் பொறுக்கிக் கொள்ளுகிறார்கள் அவ்வெளியவர்கள் ! அத் திண்டாட்டம் ஒன்றே ஆதித்திராவிடர்கள் காணும் தீபாவளிக் கொண்டாட்டம் !

துவாபரயுகத்தில் ஒரு நரகாசுரன் இருந்தால், இக் கலிகாலத்தில் தீபாவளியன்று—ஒவ்வொரு கிராமத்திலும் ஐந்தாறு நரகாசுரர்கள் காட்சியளிக்கிறார்கள் ! நரகாசுரன் நரபலி கொடுத்திருக்கும்போது, தாங்கள் அஜ! (ஆட்

டுப்) பலிகளாவது கொடுக்க வேண்டாமா என்று அவர்கள் கேட்கிறார்கள்! தீபாவளி யன்று, சிலர் கண்ணபிரானது திருவருளைப் பெற முயன்றால், வேறு சிலர், கடைசியிலாவது அவரது அருளுக்கு இலக்காகிய நரகாசுரனது அருளைப் பெற முயல்வதில் என்ன தவறு என்பது அவர்களது கேள்வி! (நரகாசுரன் இறுதியில் எதனால் பகவத் கடாக்ஷத்திற்குப் பாத்திரனானான் என்பதைப்பற்றி அவர்களுக்கு கவலை இல்லை! நரகாசுரன் சண்டையில் அரக்கர் இரத்தம் ஆறாய்ப் பெருகியோடியிருப்பதை சிந்திக்கும்போது, தாங்கள் தீபாவளியன்று ஆட்டிரத்தத்தையாவது சிந்தச் செய்வதில் குற்றமில்லை என்பது அவர்கள் சித்தாந்தம்! பதறிக் கதறித் தலையறுப்புண்டு துடி துடிக்கும் ஆடுகளின் திண்டாட்டம், அவ்வேழைப் பிராணிகளைக் கொன்று குவிக்கும் (கோழைகளான அதரும) யுத்த வீரர் (!) களுக்குக் கொண்டாட்டமாக இருக்கிறது! தெய்வத் தண்டனையைப்பற்றிய பயமே அவர்களது நெஞ்சில் கொஞ்சமும் இல்லாதபோது, வேறு எதற்குத்தான் அவர்கள் அஞ்சப்போகிறார்கள்? தீபாவளியன்று உண்ணவேண்டிய உயர்ந்த பலகாரம் மாமிசமே என்பது அவர்களது தீர்மானம்! அதுவே அவர்களையும்—அவர்களை மனத்தாலும் பேச்சாலும் செயலாலும் ஆதரித்து நடப்பவர்களையும்—'ஆடுவோமே—பள்ளுப் பாடுவோமே—ஆனந்த மாமிசம் அடைந்துவிட்டோம் என்று ஆடுவோமே' —என்று பாடிக் களிக்கூத்தாடச் செய்யக்கூடிய அரும் பெரும் விருந்தாகும்.

நரகாசுரனுக்கு மிகவும் உகப்பான பானம் எது? மது! மது!! மதுவேயன்றோ!!! தீபாவளியன்று கண்ணபிரானது திருவருளைப் பெறுவது குறித்துச் சிறிதளவுங் கவலை கொள்ளாத நரகாசுர பக்த சிரோமணிகள், கள்ளரக்கனைக் களிக்கச் செய்வது இயல்பே யல்லவா? சாதாரண காலத்தில் நாளொன்றுக்கு இருபது ரூபாய்க்கு வியாபாரம் நடக்கும் கிராமத்துக் கள்ளுக்கடை ஒன்றில் தீபாவளித் தினத்தன்று மட்டும் குறைந்தபட்சம் இருநூறு ரூபாய்க்கு வியாபாரம் நடக்கும்! வெற்று நாட்களில் கள் குடிக்க வெட்கப்படுவோருங்கூட, தீபாவளியன்று கள்ளை ருசிபார்க்கத் துணிந்து விடுகிறார்களென்றால், தினசரிக் குடியர்களது திருக்கூத்தைப்பற்றிக் கேட்பானேன்? வருஷத்தில் ஒருநாளாகிய தீபாவளிப் பண்டிகையன்று சந்தோஷமாக பொழுது போக்க வேண்டுமானால், கொஞ்சம் கள்ளாவது குடித்தே தீரவேண்டுவது அத்தியாவசியம் என்பது கிராமவாசிகளுள் பெரும்பான்மையோரது எண்ணம். அன்று கள் குடிப்பது நீண்டகாலமாக வழக்கத்தில் இருந்து வரும் சம்பிரதாயமாம்! கையிலிருந்த பணத்தையும் பறிகொடுத்து, வெய்யிலாயினும் மழையாயினும் தெருப் புழுதியில் புரண்டு கிடக்குமாறு சுய உணர்ச்சியையும் இழந்து, வாந்தி எடுத்து, வாயில் வந்தவாறெல்லாம் பிதற்றிக்கொண்டு, ஆடியும் பாடியும் பலராலும் பரிகசிக்கப்பட்டு, பலவகைத் திண்டாட்டங்களுக்கும் உட்படுவதே இக்காலத்துக் கிராமவாசிகள் பலரது தீபாவளிக் கொண்டாட்டம்!

"அரக்க நீர்மைகள் அனைத்தும் அகற்றி இரக்க மனத்தை இன்றுதொட்டு எனக்கு அருள்க"-என்று இறைவனைக் குறித்து மனம் உருகிக் கண்களில் நீர் பெருக அழுது பிரார்த்தித்து நிற்கவேண்டிய திருநாளாகிய தீபாவளியன்று, அதற்கு நேர்மாறாக—அரக்கத் தன்மையை வளர்க்கக்கூடிய இறைச்சியைத் தின்று கள்ளைக் குடித்து 'பண்டிகை கொண்டாடுவது' எவ்வளவு விபரீதமானது! எல்லோரும் தீபாவளியின் தத்துவார்த்தங்களை உணர்ந்து நடப்பதன் பயனாக மோட்ச லோகத்திற்குப் போய்விட்டால், எங்கே தனக்கு வேலையில்லாமல் போய்விடுமோ என்ற பயத்தினால் கலிபுருஷன் செய்த

சூழ்ச்சியினாலேயே தீபாவளிப் பண்டிகை மது மாமிசப் பண்டிகையாக மாறிவிட்டது போலும்! மேலும், பிறர் துன்பப்படுவதைக் கண்டு தாம் இன்புறுவதே தீயோர் இயல்பாதலால்—அத்தகைய தீயோரே கலிபுருஷனது ஆட்சி இடையூறின்றி நடப்பதற்குப் பெருந்துணை செய்பவர்களாக இருப்பவர்களாதலால்—மற்றவர்களது திண்டாட்டத்தை தங்களுக்கு உரிய கொண்டாட்டமாகக் கொண்டு நடக்கக்கூடியவர்கள் பற்பலரை, ஐம்பெரும் பாவங்களையும் ஐம்பெரும் படைகளாகக் கொண்டு இந்நாட்டை ஆட்டிவைக்கும் கலிபுருஷன் தயாரித்து வைத்திருக்கிறான் போலும்!

சகோதரிகளே! சகோதரிகளே!! (இங்கு சகோதரர்களைப் பற்றிய கவலையே வேண்டாம்!) தீபாவளிப் பண்டிகையை கண்ணபிரான் திரு உள்ளம் உகக்குமாறு கொண்டாடக்கூடிய உரிமையும் திறமையும் பெரிதும் உங்களுக்கே உண்டு. 'தீபாவளி' ஆண் தெய்வத்தின் வெற்றியைக் குறிப்பதன்று; பெண் தெய்வத்தின் வெற்றியையே குறிப்பதாகும் என்பதை மறந்துவிடாதீர்கள்! 'அரக்கன் செருக்கை அடக்கி அழித்ததோர் அற்புத வில் எவர் வில்?—கண்ணன்—பக்கத்திருந்து மூனைந்தமர் செய்த நற்பாமை மணிக்கர வில்'—அல்லவோ? எண்ணெய் ஸ்நானம் செய்வது, புதுப்புடவை உடுப்பது, பலகாரங்கள் உண்பது என்ற மூன்றோடேயே தீபாவளி தீர்ந்துவிடுவதாக நினைத்துக்கொண்டு விடாதீர்கள்! அகப்புற அழுக்குகளை அகற்றிவிடுவதைக் குறிக்கவே எண்ணெய் ஸ்நானம் ஏற்படுத்தப்பட்டது. புனிதமான புத்துணர்ச்சி கொண்டு—உள்ளத்தைத் தூய்மையாக வைத்துக்கொள்ள வேண்டும் என்பதை குறிப்பிக்கவே புதுக்கலை உடுக்கும் வழக்கம் ஏற்படுத்தப்பட்டது! தீபாவளியன்று அமரர் நிலையை யடைய முயலவேண்டிய மனிதர்கள், அரக்கர் நிலையை யடைய முன்வருவது எவ்வளவு அறியாமை! பாரதியார் கூறுமாறு, "மாற்று வையம் புதுமையுறச் செய்து மனிதர் தம்மை அமரர்களாக்கக் கூடிய" ஆற்றல், பெண் தெய்வங்களுக்கே பெரிதும் உண்டு. ஆதலால், தீபாவளி யன்று அதிகாலையில் அக இருள் அகற்றும் அருட்பெருஞ் சோதியை நினைவூட்டும் சுடர் விளக்குகளை ஏற்றி, 'மூத்த பொய்மைகள் யாவும்' அழித்து 'மூடக் கட்டுகள் யாவுந் தகர்த்து' 'மானிடர் செய்கை அனைத்தையும் கடவுளுக்கு இனிதாகச் சமைக்கப்' போதிய ஆற்றலை வழங்கியருளுமாறு கண்ணபிரானை உண்மையன்போடும் உருகும் உள்ளத்தோடும் பிரார்த்திக்கக் கடவீர்களாக. உங்களது உள்ளத்தில் தீவிர தேச பக்தியும், உடலில் தூய கதர்ப் புடவையும் ஒளிர்வனவாக. தீபாவளியன்று உங்களது வீடு ஆனந்த நிலையமாக விளங்குவதாக. அந் நன்னாள் தொட்டு புத்துணர்ச்சி கொண்டு, தாய் நாட்டின் முன்னேற்றத்திற்கேற்ற நற்பணிகளில் தலைப்பட்டு உழைக்க உறுதி செய்து கொள்வீர்களாக. வீரத்தாயான சத்தியபாமா தேவியின் இன்னருள் உங்களுக்கு துணை நிற்பதாக. வந்தேமாதரம்!

"ஐயமுந் திகைப்புந் தொலைந்தன; ஆங்கே அச்சமுந் தொலைந்தது; சினமும்
பொய்யுமென்றினைய புன்மைகளெல்லாம் போயின; உறுதி நான் கண்டேன்!
வையம் இங்கனைத்தும் ஆக்கியும் சாய்த்தும் மாய்த்துமே மகிழ்ந்திடு தாயைத்
தூய்ய வெண்ணிறத்தாள் தனைக் கரியவளைத் துணையெனத் தொடர்ந்து
[கொண்டின்றே."—பாரதியார்.

# கம்பர் கவியின் செந்தமிழின்பம்

——:(o):——

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான். பீ. ஏ.

ஆராய்ச்சி அறிஞர் மிகுந்த இக்காலத்தில், இராமசரிதையை உண்மையாய் நடந்த சரித்திரம் என்பர் பலர், அன்று என்பர் சிலர். ஆனால் காய்தல் உவத்தல் அகற்றி ஆராயுமிடத்துக் காணும் உண்மைகள் சில நம்மிந்திய நாட்டின் பூர்வீகப் பழங்குடியாய் வாழ்ந்துவந்தவர் தமிழர் என்பதும் வடநாடிருந்து தென்னாடு போந்தவர் ஆரியர் என்பதும், இவர்களில் ஒருவரது உரிமையை ஒருவர் கைப்பற்ற முயல மற்றவர் தம் முரிமையைக் காப்பாற்ற முயல, இருவருக்கும் இயற்கையாய்ப் போர் விளைந்த தென்பதும் இப்பெரும் போரில் ஒரு சிறு பகுதியே இராம காதையா மென்பதும் ஆராய்ச்சியாளர் துணிவு; இதுவே சரித்திர ஆசிரியர்கள் கண்டறிந்த உண்மையுமாகும். ஆனால் வான்மீகி முனிவர் இச்சரிதையை, தம் கற்பனை சக்தியினாலும் கவியலங்காரத்தாலும், பன்னலமும் பல பொருளும் பொருந்த அமைத்து காவிய உலகத்தை அணி செய்வாராயினர். ஆனால் அவர் ஆரியரானமை பற்றி அச்சரித்திரத்தின் ஒரு பகுதியினரான ஆரியரைத் தேவர், சுரர் என்று போற்றியும், மற்றொரு பகுதியினரான திராவிடரை, அரக்கர் வானரர் என்று தாழ்த்தியும் கூறியதோடமையாது, நூல் முழுவதிலும் ஆரியருடைய பழக்க வழக்கங்களையே அமைத்துக் காவியத்தை முடிப்பாராயினர். இக்காதையைத் தமிழில் யாத்த கவியரசர் கம்பர் பெருமான், வான்மீகியின் முதனூலைப் பின்பற்றி இந்நூலை எழுதுகின்றேன் என்று கூறினாலும் காவிய முழுவதிலும், தமிழ் மொழியின் தனிப் பெருமையினையும் தமிழகத்து மக்களின் ஒழுக்கத்தின் விழுப்பத்தினையும் அவர்தம் பழக்க வழக்கங்களையும், தமிழ் மாதர் நிறையையுமே போற்றிப் புகழ்கின்றார். இத்தைய இடங்கள் கம்பர் காவியத்தில் பலவுள. இந்த இடங்களிலேதான் கம்பரது கவியின் செந்தமிழ் இன்பம் பொங்கி வழிகின்றது. "செந்தமிழ் நாடென்னும் போதினிலே இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே" என்று பாரதியார் அருளிய உண்மையை இவ்விடத்துத் தான் காணலாம்.

கவியரசர் கம்பர் பெருமான் தமிழ் மொழியினையும் அதன் தொன்மையினையு முணர்ந்து, "என்று முளதென் தமிழ் இயம்பி இசை கொண்டான்" என்றும், "நீண்டதமிழா லுலகை நேமியினளந்தான்" என்றும் தமிழின் தனிப்புலவரான அகத்தியரைப் போற்றுகின்றார். இவ்விடத்துக் கம்பரது கவிநலம் பெரிதும் விளங்குகின்றதன்றே. தமிழ் மொழியினை உணர்ந்த கம்பர் என்றுமுள தென்தமிழ் என்றும், நீண்ட தமிழ் என்றும் போற்றிய தோடமையாது இத்தமிழக மக்கள் இம்மொழி அகத்தியர் நாவிலே பிறந்தது என்ற ஓர் தவறான கொள்கையுடையவர்களா யிருக்கின்றார்கள் என்பதையும் உணர்ந்தவராய் அக்கொள்கையை அகற்றுவான் விரும்பி அத்தேன் தமிழை இயம்பி இசை கொண்டவரே அகத்தியர் என்று கூறுகின்றார். ஆகவே தமிழ்

மொழியானது அகத்தியரால் படைக்கப்பட்டதன்று என்பதும், அம்முனிவரே தமிழின் இனிமையை உணர்ந்து அம்மொழியினைக் கற்று அம்மொழியில் இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் இயம்பிப் புகழ்பெற வாழ்ந்த பெருமகன் என்பதும் வெள்ளிடை மலைபோல் விளக்க முறுவதாயிற்று.

ஆனால் அகத்தியரைத் "தமிழெனும் அளப்பருஞ் சலதி தந்தவன்" என்றும், "தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்" என்றும் போற்றும் கம்பர் கவியின் பொருள்தானென்னை என்று சிலர் வினவலாம். இவ்விடத்தில் தமிழ்மொழி ஆழமறிய முடியாத ஓர் பெருங்கடல் என்பதும், அக்கடலினை உலகில் நிமிர்ந் தேறவிட்ட பெருமையே அகத்தியருக்குரிய தென்பதும் வலியுறுத்தப்படுகின்றது. தமிழின் தொன்மையைக் குறிக்கவே உபசாரவழக்காக, "தழற்புரை சுடர்க் கடவுள் தந்த தமிழ் என்றும் கூறப்பட்டதே யொழிய வேறன்று. இதன்றி இம்மொழி அக்கடவுளிடத்திருந்தாவது அகத்தியரிடத்திலிருந்தாவது உதித்தது என்று கொள்வது பெரும் பேதைமையேயாகும். தமிழின் இனிமையை உணர்ந்த கம்பர் "வண்டு தமிழ்ப் பாட்டிசைக்குந் தாமரையே" என்று அதன் இனிமையைப் போற்றிப் புகழ்கின்றார். "தமிழினுமினிய தீஞ் சொற்றையல்" என்ற நைடதத்தார் வாக்கும் இங்கு நோக்கத்தக்கது. "தமிழென்ப தினிமை நேர்மை" என்பர் சூடாமணியார். அழகொழுகும் தமிழ் மொழியின் இனிமை அனுபவித்தவர்கட்கே புலப்படும். கம்பர் கவியின் செந்தமிழின்பத்தை உணர்ந்த தமிழ் பெருமக்கள் பலரும் அவ்வினிமையை நுகர்ந்தவரே யாவர். நிற்க.

இனி, கவியரசர் தமிழ் மொழியில் மட்டுந்தானா பற்றுடையராய் விளங்குகின்றார் என்று பார்த்தால் அன்று. இத்தமிழ்மொழி பேசப்படும் நாடு நகரங்களெல்லாம், அவரது கவிகளால் புனைந்து கூறப்படும் பேறு பெற்றன. "காவிரி நாடன்ன கழனி நாடு" என்று கோசலை நாடு வர்ணிக்கப்படுகின்றது. ஒரு நாட்டிற்கு உவமைகூற வேண்டியிருந்தால் இந்நாடு கைலாயத்தை ஒக்கும், வைகுண்டத்தை ஒக்கும், தெய்வ உலகத்தை ஒக்கும் என்று கூறுவதே கவிமரபாகும். ஆனால் இயற்கைக் கவிநலம் வாய்க்கப்பெற்ற கவியரசர், "கண்ட பொருளில் கணப்பவரன்றிக் காணாப் பொருளில் கணிப்பதற் கறியார்" என்னும் விதிபற்றித் தாம் பிறந்து வளர்ந்த காவிரி நாட்டை ஒக்கும் அக்கோசலை நாடு என்று கூறுவது அவரது தேசீயத்தையும் கவியின் இயற்கை நலத்தையும் பெரிதும் விளக்குகின்றது, இத்துடன் "தெய்வப் பொன்னியே பொருவுங் கங்கை" என்று கங்கா நதி போற்றப்படுவது நம் கவனத்தைக் கவரும் ஓர் இடமாகும். இன்னும் இவர் பாண்டி நன்னாட்டைப் பற்றிக் குறிக்குங் காலத்து,

"அத்திருத்தரு நாட்டினை அண்டர் நாடு
ஒத்திருக்கும் என்றால் உரை யொவ்வுமோ
எத்திறத்தினும் ஏழுலகம் புகழ்
முத்தும் முத்தமிழும் தந்து முற்றுமோ."

என்று கூறுஞ் செவ்வி கம்பர் கவிநலத்தால் அமைந்த பொருளாகும். தமிழ் நாட்டின் சிறப்புடைப் பொருள்களான முகத்திற்கும் எத்தகைய ஏற்றம் கற்பிக்கின்றார் கவியரசர். இத்துடன்,

"அமிழ்துறழ் தமிழ்ஒண் முத்தம்
ஐய சந்தனம் மெல்வாசம்
கமழ்குளிர் தென்றல் என்று
கரையரும் பொருள் படாமல்
இமிழ் கடல் வரைப்பெலாம் தோன்றும்
எண்பொருள் படுநாடென்னித்
தமிழ் முதல் பிறக்கும் நாடாய்த்
தயங்குமாற் பாண்டிநாடு."

என்று சிவப்பிரகாசர் அருளிய செய்யுளும் உற்று நோக்கத்தக்கது. தமிழகத்துத் தனிப் பெரும் பொருள்களாம் தமிழ் மொழி, முத்தம், சந்தனம், தென்றல், என்பவைகளில் முன்னைய திரண்டையும் போற்றும் கம்பர் கவிநலம் அழகுடையதேயாகும்.

இன்னும் இராமனைப் போற்றுமிடத்துங்கூட இவரது தமிழ் மொழிப் பற்றே முனைந்து நிற்கின்றது. ஆரியர் கோனும் இராமனும், "தென் சொற் கடந்தான் வட சொற்கடற்கு எல்லை தேர்ந்தான்" என்றே புகழப்படுகின்றான். இம்மட்டன்று. இன்னும் அறத்தின் வழி நின்ற ஆரியர்கோன் அனுமனுதிய வானர வீரர்களைத் தென்திசை நோக்கித் தேவியைத் தேட விடுத்த காலையில் அவர்கட்கு அறிவூட்டுகின்றான். "வானர வீரர்களே! மற்றெல்லா வீரர்களையும் விட தெற்கு நோக்கிச் செல்கின்ற நீங்களே மிகவும் கவனமுடையாராயிருத்தல் வேண்டும். தென் தமிழ் நாட்டில் பொதியமலைச் சாரலில் அகத்திய முனிவரும் அவர்தம் சீடர்களும் தமிழ்ச் சங்கம் ஒன்று நிறுவியிருக்கின்றார்கள். அச்சங்கத்தில் மிளிரும் பெரும் புலவர் பலரின் சொல்வன்மை கேட்பார் பிணிக்குந்தகையவாய்க் கேளாரும் வேட்ப மொழிவதாயிருக்கும். நீங்கள் அந்த இடத்தை அணுகுவீர்களானல் அவ்விடத்துள்ளாரது சொல் வன்மையில் ஈடுபட்டு, முயன்ற கருமத்தையு மறந்து, என்னையு மறந்து, என் தேவியையும் மறந்து, நீங்கள் தன்னையும் மறந்துவிடுவீர்கள். கொண்ட கருமமும் பழுதுபடும், ஆதலால் நீங்கள் அப்பொதியைச் சாரலில் தங்காது அம் மலையை இடமாகச் சுற்றி எடுத்த என் பணி முடிக்கச் சொல்லுங்கள்" என்று இராமன் எச்சரிக்கின்றான். இக்கருத்தைத்தான் கவியரசர் கம்பர் பெருமான்,

"தென் தமிழ் நாட்டகன் பொதியிற்
றிருமுனிவன் தமிழ்ச் சங்கம் சேர்கிற்றிரேல்
என்று மவணுறைவிடமாம் ஆதலால்
அம்மலையை இடத்திட்டேகி."

என்ற செய்யுளில் அமைத்தருளுகின்றார். என்னே இவர்தம் அறிவு நுட்பத்தின் திறம். இராமனது எச்சரிக்கையோவிது? அன்று, தமிழ்க் கவிஞராம் கமபரது சொந்தச் செல்வமன்றோ இது! எவ்வளவு அழகாக, எவ்விடத்து, எக்காலத்து, தமிழ் மொழிக்கும் அதை ஆராயும் பெரும் புலவர் பலர்க்கும், தம் அர்ப்பணத்தைச் செலுத்துகின்றார் நம் கவியரசர்.

இனி கம்பர் தமிழ் மக்களின் ஒழுக்கத்தைப் பற்றிக் கொண்டிருக்கும் கருத்தைச் சிறிது ஆராய்வோம். தமிழ் மொழியின் சிறப்புடை இலக்கண

மாகக் கருதப்படும் களவியலொழுக்கம் கம்பர் பெருமானால் பொன்னேபோல் போற்றப்படுகின்றது. ஆரிய கவியாம் வான்மீகி சீதையின் மணவினையைச் சித்திரிக்க நேர்ந்த காலையில், அவர் பிறந்தநாட்டுப் பழக்க வழக்கங்களுக்கு ஏற்பச் சுயம்வரம் ஒன்று நாட்டி அச்சுயம்வரத்தில் ஆற்றல் மிகுந்த அரனது வில்லை வளைத்து நாணேற்றுவாருக்குச் சீதையைப் பணயமாகக் குறிக்கின்றார். இம்முறையாக ஒருவன் தன் மனைவியை அடைதல் அசுரமணத்தின் பாற்படும் என்பர் பெரியோர். இந்த முறையை,

> "முகையவிழ் கோதையை முள்ளெயிற்றரிவையைத்
> தகைநலங் கருதும் தருக்கினர் உளரெனின்
> இவையிவை செய்தார்க்கு எளியள் மற்றிவளெனத்
> தொகை நிலையுரைத்த பின்னிறப் பகைவலித்
> தன்னவை யாற்றிய அளவையில்
> தொன்னிலை அசுரம் துணிந்தவாறே."

என்ற செய்யுளால் அறிக. இம்முறை ஆரிய மக்களின் முறையேயாகும். அதனால் தமிழ் மகனான கம்பர் இம்முறை வழிநடந்து தமது காவியத்தை முடிக்கக் கருதினாரில்லை. பிணி மூப்பு இவையின்றி எப்பொழுதும் ஒரு தன்மையாய் உருவும், திருவும், குலமும் குணமும், பருவமும் அன்பும், ஒத்தவராய தலைமகனும், தலைமகளும் பிறர் கொடுப்பவும் அடுப்பவுமின்றி ஊழ்வினைப் பயனாய்த் தாமே எதிர்ப்பட்டுக் காதலிக்கும் முறையே களவியல் எனப்படும். இம்முறையே தமிழ் மக்களின் முறையாகும். இதை யறிந்த சீதையை மிதிலைமாநகரில் அரசமாளிகையில் கன்னிமாடத்து மேடையில் நிறுத்துகின்றார். தெருவூடே முனிவர் முன் செல்ல, தம்பி பின்வர இராமனை நடத்துகின்றார். இருவரும் ஒருவரை யொருவர் பார்க்கின்றனர். கண்ணொடு கண்ணிணை கவ்வுகின்றது. இருவரது உணர்வும் ஒன்றி அவர்தம் உள்ளத்தில் ஆதரவுபடுகின்றனர். ஆகவே கண்ணால் கண்டு காதலித்த தலைவனே தன் கணவனாவான் என்று கருதுகின்றாள் மங்கை. பின்னர் அவளது தோழியாம் நீலமாலை முனிவருடன் வந்த மன்னவன் மைந்தன் வில்லிறுத்தான், அவனே உன்னை மணமாலை சூடுவன் என்று சீதையிடஞ் சொல்லிய காலத்துங்கூட, அவள் வில்லொடித்த காரணமாக மட்டும் அவனைத் தலைவனாய் ஏற்றுக்கொள்ளாது, தோழி நீலமாலை சொல்லுகின்ற குறிகளால், வில்லொடித்த வீரன் என்நிறை கவர்ந்த கள்வனையே இருத்தல் வேண்டும், ஒருகால் பிறிதொருவனாயிருப்பின் இறந்துபடுவேனே யன்றி வில்லொடித்த காரணத்தால் மட்டும் இவனை மணஞ்செய்ய முடியாது என்ற ஓர் உறுதியான தீர்மானத்திற்கு வருகின்றாள். இத்தீர்மானத்துடன் கம்பர், மணவறையில், மணமகளாகிய சீதை மணமகனுடன் அமர்ந்திருந்த காலத்தும், "தன் கைவளை திருத்துபு கடைக்கணிலுணர்ந்தாள்" என்று மீண்டும் தம் கருத்தை வலியுறுத்துகின்றார். ஆகவே இத்தமிழகத்து ஒழுக்கம் அவரது உள்ளத்தில் எவ்வளவு ஆழ்ந்து பதிந்து கிடக்கின்ற தென்பதைக் காட்ட இது ஒரு சான்றாகும். இன்னும் தமிழ் மக்களின் ஒழுக்கத்தைப் பலகாலும் பலவிடத்தும் போற்றி மகிழும் கம்பர் கவிநலமும் கற்றோர் உள்ளத்திற்குக் கழிபேருவகையைத் தருகின்றது. உதாரணமாகத் தமிழக உலகில்தான், ஒருவனுக்குப் பெண் கொடுத்த பெரியோன் மாதுலன் என்று அழைக்கப்படுகின்றான். இம்முறை

பற்றி, "நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினன்" என்று கவி கூறுவது தமிழ் ஒழுக்கத்தில் அவரது ஆழ்ந்த பற்றையன்றி வேறெதை விளக்கும். இவையெல்லாம் ஒருபுற மிருக்கத் தமிழகத்து மாதரின் நிறையுடைமையைப் பெரிதும் உணர்ந்தவர் கம்பரேயாவர்.

"தங்கள் நாயகரில் தெய்வம் தவம் பிறிதில வென்றெண்ணும்
மங்கைமார் சிந்தை போலத் தூயது."

என்று கற்புடைய மாதர் மனத்தைப் போற்றுவது,

"தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யும் மழை."

என்ற வள்ளுவர் வாக்கினை நினைப்பூட்டுகின்றது. இன்னும், சீதை தன்னிடம் தன் நாயகன் அணுகி, தாயுரை கொண்டு தந்தை சொற்காக்க நான் காடு செல்கின்றேன் நான் திரும்பிவரும் வரை நீ இங்கேயே இரு என்று கூறிய பொழுது.

"நாயகன் வனம் நண்ணலுற்றான் என்றும்
மேயமண் இழந்தான் என்றும் விம்மலள்
நீ வருந்தலை நீங்குவன் யானென்ற
தீய வெஞ்சொல் செவிசுடத் தேம்புவாள்."

என்று கவியரசர் அமைத்திருக்கும் சித்திரம் எத்துணை அழகுடையதாய்த் திகழ்கின்றது. இத்துடன்,

"சொல்லாமை யுண்டேல் எனக் குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை."

என்ற வள்ளுவர் குறளை ஒப்பிட்டு நோக்கினால் உண்மை காண்போம். என்னே! தமிழ் மாதரின் நிறையுடைமை! இவ்வாறு தேம்பும் தேவியைத் தேற்ற, இராமன் கூறும் மொழிதானென்னை? "காதலி! உன்னையு முடனழைத்துப் போவது சாத்தியமன்றே. நானோ காடும் மலையுங் கடந்து" செந் நெருப்பினைத் தகடுசெய்துபார் செய்த தொக்கும்" பாலை நிலங்களின் வழியாகவெல்லாம் செல்ல நேரும். நின் செவ்விய சேவடிகள் அச்சூட்டைத் தாங்காதே என்று வருந்துகின்றான். இதற்குச் சீதை பதிலுரைக்கும் இடத்தில்தான் தமிழ் மாதர் வீரம் தோன்றி மிளிர்கின்றது. அன்ப! நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு" என்று சீதை கூறுஞ் செவ்வி கம்பரது கவிநலத்தால் அமைந்த ஒரு பொருளாகும்.

இவ்வாறு, தமிழகத்து மாதரின் நிறையுடைமையை யெல்லாம் தன் உறு பொருளாக்கிக் கொண்ட மங்கையை அமரர்தம் புகழ் விழுங்கிய அரக்கர் கோன் தூக்கிச் செல்கின்றான். இதே தோற்றத்தைக் கண்முன் தெற்றெனக் கண்ட வான்மீகர், சீதையை முதலில் அவள் தன் இரண்டு கால்களுக்கு மிடையே தன்கையைக் கொடுத்துத் தன் தோளின் மீது தூக்கிப் பின்னர் தனது ரதம் ஏறி, அவன் தன் மயிர் பிடித்திழுத்து தன்மடிமீது வைத்துச் செல்கின்றான் இராவணன் என்று சித்திரம் தீட்டுகின்றார். இதே தோற்றம்

கவியரசர் கம்பர் கண்ணுக்கும் தோன்றுகின்றது. ஆனால் தமிழகத்து மாத ரின் நிறையுடைமையை உணர்ந்த கம்பர் வான்மீகியைப் பின்பற்றி அவர் தீட் டிய சித்திரத்தையே ஒட்டித் தானும் கவியமைத்திருப்பாராயின் அந்தோ! பரிதாபம்! அவர் பட்டிருக்கும் பாடு பெரும்பாடாயிருந்திருக்கும். அவரும் அவரது இராமாயணமும் தமிழக உலகில் இன்றிருக்கும் நிலையில் நின்றிரா என்று சொல்வது மிகையேயாகும். ஆனால் இதற்கெல்லாம் இடங்கொடுத் தனரா?—இல்லை—இடங் கொடுப்பாரா? அவரது மனப்பான்மையின்படியே இராவணன் சீதையை அவள் குடியிருந்த பர்ணகசாலையுடனும்—இல்லை—அப் பர்ணகசாலை கட்டியிருந்த இடத்துடனும் தூக்கிச் சென்றான் என்று கவி கூறுகின்றார். இவ்விடத்து ஒரு சிறந்த உண்மை பொதிந்து கிடக்கின்றது. கற்பெனப்படுவது பிறர் நெஞ்சு புகுதாமை என்பது தமிழ் மக்களின் கருத் தாகும். இக்கருத்தையே,

"மண்டிணி ஞாலத்து மழை வளந்தரூஉம்
பெண்டிராயிற் பிறர் நெஞ்சு புகாஅர்."

என்று அணிகெழு நூலாம் மணிமேகலை யியற்றிய சீத்தலைச் சாத்தனார் போற்றி யுரைக்கின்றார். ஒரு பெண்ணை அவள் தலைவனைத் தவிர பிறனொரு வன் கண்டு இப்பெண் மிகுந்த அழகுடையவள், இவளுடன் கூடியிருத்தல் அன்றோ பேறு என்று எண்ணிய காலையிலேயே அப்பெண்ணின் கற்பிற்குப் பழுதுவந்தது என்ற தீவிர கொள்கையுடையோர் தமிழர். இத்தகைய கொள் கையுடைய தமிழ் மக்கள் எவராவது சீதையை இராவணன் மயிர்பிடித் திழுத்து மடிமீது வைத்து எடுத்துச் சென்றான் என்பதை ஒப்புக்கொள்வார் களா? பிறர் நெஞ்சு புகுதலே தம் நிறையுடைமைக்கு இழுக்கு என்று கோள் ளும் பெருஞ் செல்வராகிய தமிழ் மக்கள் பிறன் கைப்புகுதலை அனுமதிப்பார் களா? பிறன் கைப்புகுந்த காலத்திலேயே அவள்தன் கற்பும், அவள் உயிரும் ஒருங்கே போயிருக்க வேண்டுமல்லவா. அவ்விதம் நிகழ்ந்திருந்தால், இராம காதை அத்துடன் முடிவுபெற்றுவிட வேண்டியதைத் தவிர வேறு முடிவு உண்டா? இத்தியாதி காரணத்தை உத்தேசித்துத்தான் கவியரசர் கம்பர் பெருமான் தம்முடைய கவித்திறனைக் காட்டினார். கம்பர்தம் கவிப் பெரு மையே பெருமை.

இம்மட்டன்று, தமிழகத்துப் பழங்குடி மக்களாகிய திராவிடரை அரக் கர் வானரர் என்று இழித்துக் கூறிய வான்மீகரைப் பின்பற்றி அவர்களை அரக்கர் வானரர் என்றே இவர் அழைத்த காலத்தும் அவர் தம் பெருமை யினையும் வீரத்தினையும் இவர் புகழ்ந்து கூறும் உரைகள் போற்றத் தக்க தாகும்.

"நானிலம் அதனின் உண்டுபோர் என நவிலின் அச்சொல்
தேனினும் களிப்புச் செய்யுஞ் சிந்தையர்."

என்று அரக்கர் வீரம் போற்றப்படுகின்றது. அரக்கர் வீரந்தான் இவ்வள வினது என்றால், இவ்வரக்கரை அடக்கிய வானரர் வீரமோ அம்மம்ம! பெரிது. சொல்லின் செல்வனும் அனுமனது ஆற்றலும், கடல்கடந்த காதலன் தனையுடைய வானர வீரனும் வாலியின் பெருமையும் அளவிடற்கரியதாகும்.

இவ்வாறு தமிழ் மொழியினையும், தமிழ் மக்களையுந் தாம் போற்றிப் புகழ்வதுடன் அமையாது அம்மொழியின்பால் தாயன்புபூண்டு அம்மொழியில் நூல்கள் வழங்கிய, வள்ளுவர் முதலிய பெரும் புலவர்களைப் போற்றும் இவர்தம் கவிநலம் பண்புடையதாகும்.

ஆகவே, இன்னும் மிகைபடக் கூறல் என்ற குற்றத்தின் பாற்படாது, இராமாயணம் என்னும் பெரு நூல் வடமொழிப் புலவராம் வால்மீகியின் கற்பனா சக்தியினாலும் கவியலங்காரத்தாலும் அமைந்த ஓர் காவியம் என்றாலும் அக்காதை தமிழகத்துத் தனிப்பெரும் புலவரான கம்பர் பெருமானால் தமிழ் மொழியில் அழகுற அமைக்கப்பட்ட காலத்தும் தமிழ் மொழியின் பெருமையினையும் தமிழகத்தின் சீர்மையினையும் தமிழ் மக்களின் ஒழுக்கத்தின் விழுப்பத்தினையும் உலகிற்குப் பறைசாற்றி, செந்தமிழின்பம் வழிந்தோழுகும் ஒரு காவியமாக அமைந்தது போற்றத்தக்கதொரு பொருளாகும் என்று கூறி என் பணி முடிக்கின்றேன்.

:(o):

# அற்பம் அற்பமன்று.

(டேல்பி.)

ஒவ்வொரு விஷயத்தையும் ஆராய்ந்து பார்ப்போமானால் அதில் விசேஷ தத்துவமிருப்பது தெரியவரும். ஜனங்கள் விஷயங்களை அவ்வவவாகக் கவனிப்பதில்லை. ஒவ்வொரு மனிதர் பேசும் வாக்கியங்களையும், செய்யும் ஜாடைகளையும் கவனிப்போமானால் ஆஹா! என்னே மனிதனின் அபார சக்தி! இவ்வளவு நுட்பமான வாக்கியத்தில் எவ்வளவு சாராம்ச மடங்கி யிருக்கின்றது என்று தெற்றெனப் புலப்படும்.

உதாரணமாக ஒரு சங்கதி சொல்லுகிறேன். 7, 8 வயதுள்ள சிறுவன், கையில் ஒரு ரொட்டித் தட்டை வைத்துக்கொண்டே ஊரெல்லாம் திரிந்து, "ஓடியா, ராஜா, ஒரு அணு விற்ற ரொட்டி ஒன்பது காசு" என்று சொல்லி விற்றுக்கொண்டிருப்பதை நான் பார்த்தேன். இன்னும் அநேகரும் பார்த்தார்கள். இன்னமும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் இந்த வாக்கியத்தில் ஒன்றும் விசேஷ மிருப்பதாக தோன்றவில்லை போலும். அந்தோ! என்னே மனிதரின் பொறாமை! இன்னொருவன் புத்தி சாதுரியத்தைக் கண்டு மனஞ்சகியாதிருக்கிறோமே! இன்னொருவன் நம்மைவிட புத்திசாலியென்று நமக்கு நன்றாகத் தெரிகிறது. நாம் குட்டிக்கரணம் போட்டாலும் அவனைப் போல் ஆகப்போவதில்லை; இருந்தாலும் அவனைக் கௌரவஞ் செய்ய மனம் வருவதில்லை. ஆஹா! ஆஹா!

நிற்க, இந்தச்சிறுவனின் வாக்கியத்தில் எவ்வளவு அர்த்தமிருக்கிறதென்பதைக்கவனிப்போம். "ஓடியா, ராஜா, ஒரு அணு விற்ற ரொட்டி ஒன்பது காசு" என்கிறான்; ஒவ்வொரு பதமாக எடுத்துக் கொள்வோம்.

"ஓடியா!" அதாவது நடந்துவரக்கூடாது. நடந்துவந்தால் காரியம் மிஞ்சிவிடும். இந்த அருமையான பதார்த்தத்திற்கு எவ்வளவு போட்டியென்கிறீர்கள். பையன் தான் ஊரெல்லாம் காலையிலிருந்து மாலை வரைக்கும் ரொட்டிகளை வைத்துக்கொண்டு திரிகிறானே. இதற்குள் ஜனங்களுக்கு ஆத்திரம் பாருங்கள். நீ முன் நான் முன் என்று வருகிறார்கள். இவர்கள் இப்படிச் செய்வதில் அனேக ஜனங்களுக்குக் கஷ்டமுண்டாகிறது. அவர்கள் சாதுக்கள். போட்டி போடப் பிரியமில்லை. அதனால் ஏமாந்து போவதோ? வாயுள்ள பிள்ளை தான் பிழைக்கவேண்டுமோ? வெகுநன்று. இத்துன்பத்தை நீக்கத் தான் பையன் "ஓடியா"வென்று எச்சரிக்கை செய்கிறான். ஓடியா வென்றால் கால்தான் ஓடிவர வேண்டுமென்பதில்லை. அது உங்கள் சௌகரியம். ஆமை மாதிரி விடா முயற்சி செய்து ஒரே ஓட்ட நடையாக வந்தால் வாருங்கள், ஸைகிலில் ஏறி வாருங்கள். ஜட்காவில் வாருங்கள். ஏரோப்ளேனில் வாருங்கள். எப்படியாவது வந்து சேர்ந்து விடுங்கள். இல்லை, உங்களுக்குச் சக்தி உண்டானால் நினைக்கும்போது அங்கே வந்து நில்லுங்கள்.

ஜனங்கள் போட்டி மாத்திரம் இருந்தால் பையன் அவ்வளவு கவலைப்பட மாட்டான். அவனும் மனித கோஷ்டியில் சேர்ந்தவன் தானே. நீர் சாப்பிட்டால் என்ன நான் சாப்பிட்டாலென்ன, எல்லோரும் சகோதரர்கள் தாமே. அதற்கல்ல, இந்தப் பாழும் ஈக்களும் எறும்புகளும்... .....என்னவென்று சொல்வது! இவைகளை யார் கூப்பிட்டார்கள். மனிதருக்குச் சரியாக இவைகளும் போட்டி போடுகின்றன வென்றால் காலத்தின் கொடுமையை என்னவென்று சொல்வது. சிற்சில சமயங்களில் பையனுக்கே தெரிவதில்லை—தான் ரொட்டி விற்கிறானே அல்லது ஈ எறும்பு விற்கிறானேவென்று! அப்படிச் சூழ்ந்து கொள்ளுகின்றன. பையனுக்குத் தன்னுடைய கோஷ்டியென்றால் நிரம்ப அபிமானம். ஈ எறும்பு ரொட்டிகளை அடித்துக்கொண்டு போகக் கூடாது நம்முடைய சகோதரராகிய மனிதருக்கே இந்தப் பதார்த்தம் போக வேண்டுமென்று அவன் படும் பாடு இவ்வளவவ்வளவில்லை. அதற்குத்தான் "ஓடியா" என்று நம்மை விளித்துச் சொல்கிறான். பேஷ்! பையா! உன் தேசாபிமானமே தேசாபிமானம்! இன்னொன்று: நாம் ஓடி வராவிட்டால் மிச்சமாகவிருக்கும். ரொட்டிகளையும் ஈ எறும்புகள் நல்லதாயிற்று என்று தாமே தின்று விடுகின்றன. இதற்காகத்தான் நம்மை ஓடியா, ராஜாவென்று சிறுவன் இன்சொல்லால் இனிய குரலோடும் அன்பு ததும்பும் வாக்கியங்களால் அழைக்கிறான்.

"ராஜா" ஏன் "ஐயா"வென்று சொல்லக்கூடாது? அல்லது "ஓடியா பிரதர்" என்று சொல்லலாகாதா? அல்லது "ஓடியா பாய்" என்று சொல்லக்கூடாதா? ராஜாவென்று ஏன் சொல்லவேண்டும்? அதில்தானிருக்கிறது சூக்ஷ்மம். ராஜாவும் இந்த உணவைச் சாப்பிடக் கொடுத்து வைக்க வேண்டுமாம்! பாருங்கள் பையன் சாதுரியத்தை. அரசனிடத்தில்போய், என்ன ஓய், உமக்கு இந்த உணவு அருகதையற்றதோ, நீர்மாத்திரம் என்ன அவ்வளவு உயர்த்தியென்று சொல்வது நியாயமா? ராஜத்துரோகமாகாதா? அதைவிட ஓடியா, ராஜாவென்று விட்டால் ராஜனும் மாளிகையைவிட்டு ஓடிவர வேண்டியது தான். அப்போது அவனுக்கும் அந்தப் பொருள் போஜனத்திற்குரியதென்று ஏற்படவில்லையா? ராஜாக்களும் இந்தப் பொருளை விரும்பும்படியான அவ்வளவு அருமையானது என்று அர்த்தம். இன்னொன்று, பையன் அனேகமாய் பூர்ண ஸ்வதந்திரக் கக்ஷியைச் சேர்ந்தவனா யிருக்கவேண்டும். அரசன், பிரஜையென்ற மாறுபாடுகள் அவனுக்கு இஷ்டமில்லை. எல்லோரும் சமமே வென்பது அவன் சொள்கைபோலும். அரசனும் மற்ற ஜனங்களோடு கலந்துகொள்ள வேண்டுமென்பது அவனுடைய அபிப்பிராயம். ஜனங்கள் அரசனோடு சமத்துவம் பாராட்டத் தயாராயிருப்பார்கள். அரசனுக்குத்தான் அது கொஞ்சம் கடினமாகவிருக்கும். உன்னத பதவியிலிருந்து கீழே யிறங்குவதென்றால் எவருக்கும் கஷ்டந்தானே. அதுதான் பையன் ராஜனுக்குத் தைரியஞ் சொல்லுகிறான். "ஓடியா ராஜா."

மேலும் ஜனங்களுக்கு முகஸ்துதியென்றால் பிரியம். எவ்வளவு குரூபியாக யிருக்கட்டும் "ஏ மன்மதா"வென்று வேறு ஒருத்தனை நோக்கிச் சொன்னால் தன்னைத்தான் என்று நினைத்துக் கொள்வான். அஷ்ட தரித்திரம் சொட்டும் ஒரு மாதிடம், அம்மணி, சாக்ஷாத் லக்ஷ்மி தேவியைப்போல் தங்கள் முகத்தில் காந்தி வீசுகின்றதே என்றால் அவளுக்கு உச்சி குளிர்ந்துவிடுகிறது. பிச்சைக்காரனையும் "தர்ம தாதா" வென்றால், 'ஆமாம்' என்கிறான்.

ஆகையால் பையன் ஜனங்களைப் பொதுவாக ராஜாவென்றழைக்கிறான். புருஷேஷு ராஜா வென்று ஒரு வசனமுண்டு. புஷ்பேஷு ரோஜா, புருஷேஷு ராஜா, நாரேஷு லக்ஷ்மி, நகரேஷு காசி யென்று சொல்வார்கள். ஆகையால் நமக்குள் எவ்வளவு குறைவிருந்தாலும் புருஷர்களில் சிரேஷ்டனை ராஜாவென்று விட்டால் உள்ளங்கால் எரிகிறது. (அதாவது உச்சி குளிர்ந்தால், உச்சியின் சூடு உள்ளங்காலுக்குப் போய்விடுமல்லவா?)

இரண்டாவது ஸ்வராஜ்யம் வந்துவிட்டால், நம்மில் எவராவது ஒருவர் ராஜாவாகிவிடலாம். எந்தப் புத்தில் எந்தப் பாம்பு இருக்கிறதோ? நாம் வழியில் பார்க்கும் மனிதரில் யார் அரசராவார் என்று சொல்லமுடியும்? ஆகவே, பையன் முன் ஜாக்கிரதையாக எல்லோரையும் ஒருமிக்க ராஜாவாக்கிவிட்டான்.

ஒரு அணு விற்ற ரொட்டி, எவ்வளவு இலவசம்! ஒரே அணுதான்! வேறு சந்தர்ப்பத்தில் ஒருமனிதன் ஒரு புத்தகத்தை விற்கும்போது, "கம்பராமாயணம், வில்லிபுத்தூரார் பாரதம், திருவருட்பா, நளவெண்பா, கந்தர் அனுபூதி, பிள்ளைத்தமிழ் இவ்வரிய நூல்கள் அடங்கிய புத்தகம் விலை ஒரே அணுதான்" என்றான். புத்தகத்தை அவசரமாக ஒரு அணு கடனுவது வாங்கி வாங்கினவர்கள் புத்தகத்தைப் பிரித்துப் பார்க்க, அது மெட்ரிக்குலேஷன் பரீக்ஷைக்கு நியமிக்கப்பட்ட பாடல்களிலிருந்து பொறுக்கிய துணுக்குகள் சேர்ந்த புத்தகமாக விருந்தது.

ஆனால் பையன் பொருள் அப்படியல்ல. நேர்த்தியான வஸ்து. எல்லா ஜனங்களும் தின்று ஆனந்திக்க வேண்டுமென்றே ஒரு அணுவிற்கு விற்றுவந்தான். இப்போது பாருங்கள் அவன் தயாள குணத்தை; விலையை இன்னும் குறைத்துவிட்டான். ஏன்? இன்னும் அதிகமான ஜனங்கள் வாங்கி யுண்பதற்கே. இந்தியாவில் சராசரி வருமானம் ஒரு அணுவும் இரண்டு மூன்று காசுகளும் என்று அவனுக்குத் தெரியும். இதில் ஒரு அணு போய்விட்டால் மூன்று காசை வைத்துக்கொண்டு என்ன செய்வது? அதற்குப் பதிலாக 9 காசு விலை வைத்தால் அரையணு மிச்சமாகும். அரையணுவைக்கொண்டு உலகாளலாம். இன்னொன்று, சில மனிதருக்கு காசுக்கும் அணுவிற்கும் வித்தியாசமே தெரியாது. ஆனால் அவர்களுக்கு விலை அதிகமானதையே வாங்கத் தோன்றும். விலை அதிகமான வஸ்து எப்போதும் நல்ல வஸ்துவாகத்தானே இருக்கவேண்டும். எனக்குத் தெரிந்த சிறுவன் தகப்பனார் ஒரு கோர்ட்டில் 3-ம் ஜட்ஜ். அவன் முதல் ஜட்ஜ் பிள்ளையோடு விளையாடிக்கொண்டிருக்கும்போது இருவருக்கும் சண்டை யுண்டாய்விட்டது. முதலவன் பின்னவனைப் பார்த்துச் சொல்கிறான், அடே, உன் அப்பா ஒரு ஜட்ஜிதானே, என் தகப்பனார் 3 ஜட்ஜியடா வென்று! அதுபோல 1 அணு ரொட்டி, 9 காசுக்கு விற்றால் சில பணக்காரர்கள், சரி, 9 விலை சொல்லுகிறானே வாங்கலாமென்று ரொட்டியை வாங்கிவிடுவார்கள்.

அன்பர்களே! பார்த்தீர்களா! எவ்வளவு தாத்பரியம் அடங்கியிருக்கின்றது இந்த சிறு வாக்கியத்தில். ஆகவே விஷயங்களை ஆராய்ந்தறியும்படி உங்களை வணக்கமாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். கடவுள் கிருபை கூர்வாராக.

# என் தாயின் உருவப்படத்தைப் பார்த்து

(கி. பா.)

[இது ஆங்கிலத்தில் வில்லியம் கௌபர் என்பவர் தன்னுடைய தாயைப்பற்றி எழுதியிருக்கும் பாட்டின் சாராம்சமாகும். இவர் ஆங்கிலக் கவிகளில் பிரபலமானவர்களில் ஒருவரன்றாயினும், உருக்கமானவும் தெய்வீகமானவுமாகிய பாடல்களை யருளிச் செய்திருக்கிறார். இவர் தாய் இவருடைய சிறு வயதிலேயே இறந்துவிட்டாரென இப் பாட்டிலிருந்தே தெரியவருகிறது.]

ஓ, அந்த வாயில் பேச்சிருக்கக்கூடாதா! உன் அமுத மொழிகளைக் கடைசியாகக் கேட்டது முதல் எனக்குப் பலவித துன்பங்கள் உண்டாயிருக்கின்றன. அவ்வுதடுகள் உன்னுடையவே-உன் பிரியமான புன்னகையே நான் காண்கிறேன்-ஆ, அப் புன்னகையே என் சிறு வயதில் ஆறுதல் தந்திருக்கிறது. வார்த்தை யொன்றில்லையே தவிர, எவ்வளவு ஸ்பஷ்டமாக அவை கூறுகின்றன! "என் குழந்தாய், வருந்தாதே! உன் பயத்தையெல்லாம் ஒழித்துவிடு!"

அக் கண்களின் உருக்கமான பார்வை (ஆ! சித்திரமெழுவதை நான் வாழ்த்துகின்றேன். அதன்றி மாணத்தின் கெடுதல்களை யாரே நிவர்த்திக்க வல்லார்?) இன்னும் என்மீது ஒளி வீசுகின்றது.................என் தாயே! நீ இறந்தாயென்று கேள்விப்பட்டவுடன் நான் உகுத்த கண்ணீரை நீ யறிவாயோ? உன் ஆவி உன் துரதிர்ஷ்ட சிசுவின்மீது தயங்கிற்று? ஒருகால் என்னையறியாமல் எனக்கு முத்த மீந்தனையா? ஒருகால் நீர்த்துளி—ஆவிகள் அழக்கூடுமானால்?—ஆ! அந்த இனிய புன்னகை—அது 'ஆம்' என்கிறது!

நீ இறந்தன்று கோவிலில் மணி யடித்தது எனக்குத் தெரியும். (1) உன் சவத்தை யடக்கம் செய்திருந்த பெட்டியை என் படுக்கையறையினின்றும் பார்த்தேன். என் கண்கள் நிரம்பி, ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டழுதேன். உன்னிடம் விடைபெற்றேன். உன்னைவிட்டுப் பிரிந்தேனா? ஆம்—ஆனால் நீ இருக்குமிடத்தில் வந்தனமும் பிரிவுபசாரமும் தெரியாத விஷயமாயிருக்கும். நான் அங்கே உன்னைச் சந்தித்தேனாகில் பிரிவு என்பதே மறந்துபோகும்.

உன் வேலைக்காரிகள் என்னை சமாதானஞ் செய்து நீ சீக்கிரமாய் வருவாயென்று சொன்னார்கள். இதைநம்பி நான் நாளைக்கு நாளைக்கென்று தினங்களைக் கழித்து ஏமாந்தேன். காலம் என் துக்கத்தைச் சிறிது ஆற்றினானென்றாலும், உன்னை நான் என்றைக்கும் மறக்கவில்லை. நாம் குடியிருந்த வீடு

இப்போது நம்முடையதல்ல. உன் குழந்தைகளல்லாதவர்கள் என் விளையாட்டு அறையில் வசித்து வருகிறார்கள். நம்முடைய தோட்டக்காரன் என்னை அழகான உடுப்பில் சிங்காரித்து; என் சிறு வண்டியிலிருத்திப் பள்ளிக்கழைத்துச் சென்றது— ஆ! அந்த சரித்திரமே இப்போது மறந்து போயிற்று. அந்த வீடே நம்மை விட்டுச் சென்றது. ஆயினும் என் ஹிருதய கமலத்தில் அக்காலத்தில் நடந்த தொவ்வொன்றையும் வைத்திருக்கிறேன். அவற்றை எந்தப் புயலும் அழிக்காது. மற்ற விஷயங்கள் மறந்து போயின. இது என்றைக்கும் பசுமையாயிருக்கிறது.

என்னைப் பக்குவமாய்ப் படுக்க விட்டிருக்கிறார்களாவென்று பார்க்க நீயே நேரில் வந்து பார்ப்பதும், காலையில் நான் பள்ளிக்குப் போவதற்கு முன் கையில் தின்பண்டம் கொடுப்பதும், உன் தங்கக்கையினாலே சுகந்த நீரை விட்டுக் குளிப்பாட்டுவதும், இவையெல்லாவற்றிலும் மேலான சதா சுரக்கும் உன் அன்பின் பெருக்கால் என்னை நனைத்ததும், என் மனத்தில் அப்படியே இருக்கின்றன. இவற்றை உலக ஞாபகத்தில் வைக்க பிரயத்தனப்படுகிறேன். இவ்வரிகள் மதிப்பில்லாமலிருக்கலாம். ஆனால் மனப்பூர்வமாக எழுதப்பட்டவை. இப்போது, மறுபடியும் முன்போல் நான் சிறு குழந்தையாய் உன்னோடிருக்கக் கூடுமாயின்— ஆ, எவ்வளவு நன்றாயிருக்கும்! ஆயினும் நான் இந்த ஆயுளை விரும்பவில்லை. உன்மேல் எனக்கிருக்கும் அன்பு உன்னுடைய ஆவியை மறுபடியும் சரீரத்தில் புகுத்து இங்கு கொண்டு வர சம்மதிக்கமாட்டேன்.

ஒரு கப்பல், இங்கிலாந்தை விட்டு, புயல்களுக்குத் தப்பி, அழகியதோர் துறைமுகத்தையடைந்து, சுகந்த பரிமளத்தை சுவாசிக்கும் பெருமையை பிரயாணிகளுக்குக் கொடுப்பது போல், நீயும் இவ்வுலகமாகிய புயலைவிட்டு மழை, காற்று, புயல் இல்லாத துறைமுகத்தையடைந்து இன்புற்றிருக்கிறாய். உன் கணவனும் உன்னோடு சுகித்திருக்கிறார். ஆனால், நானோ அந்தச் சுகத்தை யனுபவிக்க எதிர் பார்க்கக் கூடவில்லை. துறைமுகத்திற்குள் புக முடியாமல் சதா அவஸ்தைபட்டுக்கொண்டு, காற்றினால் அங்குமிங்கும் அலைக்கப் பட்டு, தண்ணீரின் வேகத்தால் நாளுக்கு நாள் துறைமுகத்திற்கு வெளியே வெகுதூரம் தள்ளப்பட்டு இன்னலுறுகிறேன். ஆயினும் நீங்கள் இருவரும் சுகமாயிருப்பது எனக்கு சந்தோஷத்தைத் தருகிறது. என்னிடம் பெரிய வம்சத்தைச் சேர்ந்தவனென்று கர்வமில்லை. வானத்திற்குள் புகுந்தவிட்டவருடைய மகன் என்பதே மகத்தான பேறு. எனக்கு விடை கொடு. சிந்தனை சக்தியால் இளமைப்பருவம் மறுபடியும் எனக்கு இப்போது வாய்த்தது. நீ சென்றாலும், காலம் உன்னைக் கவர்ந்து சென்றாலும் உன்னுடைய உருவப் படத்தை எனக்குக் கொடுத்து உன்னுடைய அன்பை என்னிடம் விட்டிருப்பதற்காக நன்றி பாராட்டுகின்றேன்.

குறிப்பு:— (1) கிறிஸ்தவ சம்பிரதாயம் இறந்தவருடைய ஆவிக்கு நிம்மதியுண்டாவதற்கு கோவிலில் ஜபம் செய்வது வழக்கம். அதற்கு முன் இறந்ததை யறிவிக்க கோவில் மணி வருத்த ஒலியோடு அடிக்கப்படும்.




# விடா முயற்சி.



(P. கிருஷ்ணமாச்சாரி.)

"அப்பா மறுபடியும் பிரயத்தனம் செய்துபாரும், இன்னு மொருதரம் பாரும்" என்று பரிதாபத்துடன் சரஸ்வதி தன் தகப்பன் லோகநாதனை மன்றாடிக் கேட்டுக்கொண்டிருந்தாள். லோகநாதன் துக்கத்தை அடக்க முடியாமல் தலைவிரி கோலமாய் மேஜையின்பேரில் கவிழ்ந்த வண்ணம் பிரலாபித்துக்கொண்டிருந்தான். அவன் பக்கத்தில் அவன் மகள் வெளுத்த முகத்துடன் பிரமை பிடித்து பதுமைபோல் இமை கொட்டாமல் அவனைப் பார்த்த வண்ணமாகவே முழந்தாளிட்டு உட்கார்ந்து கொண்டிருந்தாள்.

"நான் முயற்சிப்பதில் பிரயோசனமில்லை கண்மணி! நான் எத்தனையோ தரம் பார்த்தாய்விட்டது. என்னால் முடியவில்லையே" என்று லோகநாதன் தலை நிமிராமல் மேஜையில் மேன்மேலும் முட்டிக்கொண்டே கதறினான்.

"உன் ஊதாரிக் குணத்தையும் கெட்ட வழக்கத்தையும் விட்டுவிட வேண்டுமென்று நேற்றுதான் என் எஜமானர் எச்சரிக்கை செய்தார். எனது டாம்பிகத்தனமும், செலவுகளும், நடத்தையும் அவருக்குச் சிறிதும் பிடிக்க வில்லை. சிக்கனமும் செட்டும் சீருமாக இருப்பவர்களைத் தவிர வேறு எவரும் தம்மிடத்தில் வேலைக்குத் தேவையில்லை யென்று கண்டிப்பாய்ச் சொல்லி விட்டார். 'தன் விஷயத்தில் சிக்கனமாக இராதவன் யஜமான் விஷயத்தில் சிக்கனமாக எப்படி யிருப்பான்' என்கிறார். இதேமாதிரி நான் இழந்த வேலைகளில் இது மூன்றாவதாகும். என் செலவுகள் என்னைக் கடைசியில் படுகுழியில் கொண்டுபோய்த் தள்ளுமென்று எனக்கு நிதர்சனமாகத் தெரியும். இருந்தாலும் அவைகளை மீறி நடக்க என்னால் முடியவில்லையே."

லோகநாதன் தலையைத் தூக்கிச் சுற்றிப் பார்க்கவே நாணினான். ஒவ்வொரு மணியும் தம் ஞாபகமிருக்குமாறு, மாமனார் தனக்குக் கலியாண காலத்தில் வெகுமதியாகக் கொடுத்த விலைபெற்ற கடிகாரம் அந்த அறையில் காணப்படவில்லை. தன் பாட்டன் கால முதற்கொண்டு பரம்பரையாக உபயோகித்து வந்த வேலைப்பாடான மேஜை நாற்காலிகளும் இல்லை. இரவும் பகலும் கண்போக மனைவிபோட்ட வர்ணநூல் படங்களும் இல்லை. தான் ஆதியில் சிக்கனம் பயின்றபோது சிறுகச் சிறுக வெகு நாளாகச் சேர்த்து வாங்கின அருமையான கிரந்தங்கள் அங்கே காணோம். எல்லாம் ஒவ்வொன்றாக மார்வாடியிடம் போயினவே. இவை போன துக்கத்தையும் அடுப்பு மூட்டக் கதியில்லாததை

தையுங்கூட மறந்துவிடலா மென்றாலும் கிழிந்து தைத்த பாவாடை கட்டி போதும் போதாததுமான சொக்காய்களைப் போட்டுக் கொண்டு பேயாடி ஓய்ந்த முகத்துடனும் கண்ணீர் எப்பொழுதும் ததும்பிய கண்ணுடனும் எப்பொழுதும் தன்னைவிட் டகலாம லிருக்கும் தாயிழந்த பெண்ணின் முகத் தை அவனால் பார்க்க முடியவில்லை. துக்கம், விசாரம், வறுமை என்பதறி யாத பேதைப் பருவத்தில் ஏக்கமும் கண்ணீருமாக இருப்பதற்குத் தானே காரணமென்பதை நினைக்கும்போது—அவளுடைய ஒவ்வொரு பார்வையும் தன் புண்ணான மனத்தில் ஈட்டிபோட்டுக் குத்துவதுபோ லிருந்தது.

"மனைவியிழந்த துக்கத்தை ஒருவிதமாக ஆற்றிக் கொள்ளலாமென்று சிநேகிதர்களிடம் செல்லக் குடி, சூதாட்டம் முதலிய துர் அப்பியா சங்கள் பிடிபட்டுவிட்டன. அவைகளினின்றும் கரையேறுவது அசாத்திய மான காரியமாகத் தோன்றுகிறது. வீட்டை மறந்தேன்; குழந்தைகளை மறந் தேன்; என் பிற்கால வாழ்வை யிழந்தேன். என் காதலி லலிதா !—ஆ! லலிதா !—வற்புறுத்திச் சேரச் சொல்லிய சீட்டுகளை யெல்லாம் குறைந்த விலைக்குக் கேட்டு வாங்கிச் செலவழித்ததல்லாமல் மேற்கொண்டு கட்ட முடி யாததால் கட்டிய பணத்தையும் இழந்தேன். சரஸா கலியாணத்துக்கென்று கோ-ஆப்பரேடிவ் பாங்கில் கட்டிய பணமெல்லாம் சிறுகச் சிறுக வாங்கி செல வழிந்தாய்விட்டது. சுந்தரத்துக்கென்று வாங்கின நிலத்தை அநந்தர வார் சுகளென்று சொல்லிக்கொண்டு யாரோ சிலர் வாயில் யோட்டுக் கொண்டு விட்டார்கள். தாவா செய்யவும் பணமில்லை. குடித்து மெய்மறந்து கிடந்த சமயத்தில் யாரோ பகலில் வந்து திருடர்கள் என் மனைவி மக்களின் நகைக ளைத் திருடிக்கொண்டு போய்விட்டார்கள். வேலை போய்விட்டது. சம்பா தித்தவையும் போயின. சாஸ்வதமான சொத்தைத்தான் காணோம். வேலை கொடுப்பாரெவருமில்லை. ஐயோ! என் கதியே. கெட்டது கெட்டோம். தூக்கிலிட்டுக் கொண்டாவது ஒரு வழியாக துக்கத்தை ஒழிக்கலாமென்றால் குழந்தைகளின் நினைவும் மரணத்தறுவாயில் என் மனைவிக்குச் செய்த வாக் குத் தத்தமும் குறுக்கிடுகின்றனவே" என்று தன் மகள் பக்கத்திலிருப்பது கூடத் தெரியாமல் வாய்விட்டலறிக் கதறினான்.

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த சரஸ்வதிக்கு வாயெழவில்லை. கண்ணீர் ஆறாகப் பெருகிற்று. சிறு பெணதானே. துக்கத்தை அடக்க அவ ளுக்கு இன்னும் போதிய அனுபோகமில்லை. "கெட்ட வழக்கங்களை ஒழித்து மறுபடியும் சிக்கனமாக யிருக்கப் பாருங்கள்," என்று எவ்வளவு தரம் சொல் லியும் பயன் படாததுடன் அடிக்கடி சொல்லுவதால் ஒவ்வொரு சமயம் தகப் பனுக்குக் கோபம் வருகிறதை யறிந்து மீண்டும் சொல்லப் பயந்தவளாய் வாய்க்குள்ளே 'மற்றும் ஒருமுறை முயற்சிக்கக் கூடாதா,' என்று சொல்லிக் கொண்டாள்.

"குழந்தாய்! என்ன முணுமுணுப்பு," என்று லோகநாதன் அதட்டினான்

"போனது போகட்டும். சிக்கனமாக யிருக்க இன்னுமொரு முறை முயற்சிக்கக் கூடாதா என்று என்னையும் அறியாமல் வாயைவிட்டு வந்து விட்டது. எனக்குள்ளேயே சொல்லிக் கொண்டேன். கோபிக்கக் கூடாது," என்று மேன்மேலும் கண்ணீர் சொரிந்து தன்னை மன்னிக்கும்படி மகள் மன்றாடினாள்.

"என் கண்ணே! நான் செய்த துராக்கிரகங்களுக்கு நானல்லவோ உன்னை மன்னிப்புக் கேட்க வேண்டும். வறுமை பாவமல்ல. செலவாளித் தனத்துக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும். நான் கண்டபடி செலவழிப்பதைத் தடுக்க ஒரு வழியு மில்லையா! என் பெண் ரத்தினமே! ஒருவன் துன்மார்க்கத்தில் இறங்கி விட்டால் சேற்றில் கால்வைத்த மாதிரிதான். பெண்டு பிள்ளையிடம் என்னைவிட அதிக விசுவாசம் பாராட்டியவன் இவ்வுலகில் எவனுமிரான். ஆனால் துர்வழக்கங்களின் முன் இவ்விசுவாசங்கள் எம் மாத்திரம். கடவுள் எனக்குக் கொடுத்தது சரியான சிக்ஷை, சரியான சிக்ஷை" என்றான் லோகநாதன்.

குணம் சற்றே தணிந்திருப்பதைக்கண்ட சரஸ்வதி "அப்பா! எல்லாம் வல்ல கடவுள், ஒரு பாவி தன் பாவங்களை யெல்லாம் ஒப்புக்கொண்டு அதற்காக வருத்தப் படுவானாயின் அவர் அதை மன்னித்து அவன் நன்மார்க்கத்தி லிறங்கி மோக்ஷமடைய ஹேது உண்டாக்குகிறார் என்று வேதம் சொல்லுகிறதே," என்று தைரியத்துடன் சொல்ல ஆரம்பித்தாள்.

"பைத்தியமே! என்னிடத்தில் இந்த வேதாந்தமெல்லாம் படிக்காதே. கடவுளாவது கிடவுளாவது! கட்டபாரையை விழுங்கிவிட்டு சுக்குக் கஷாயம் சாப்பிட்டால் போகுமா? ஊரிலுள்ள பாவங்களை யெல்லாம் பண்ணிவிட்டு கடைசியில் ராமா, கிருஷ்ணா என்றால் என்ன பயன்? கண்கெட்ட பிறகு சூரிய நமஸ்காரமா? என்று உட்கார்ந்திருந்த லோகநாதன் ஜன்னியில் எழுந்து ஓடுபவன்போல் பரபரவென்று அந்த அறையில் விரைவாக உலாத்த ஆரம்பித்தான்.

"அப்பா? கடவுளுடைய சக்தி அபாரம்! அவர் கருணாநிதி. அன்பின் கடல் என்கிறார்களே! கடவுளின் சாந்தமும் கருணையும் விளக்கும் பாட்டு ஒன்று பாடுகிறேன் கேளும்..........." என்று ஆரம்பித்தாள்.

"சரஸா! நீ பள்ளிக்கூடம் போ! போ பள்ளிக்கூடம்" என்று லோகநாதன் பாதிக் கோபத்துடனும் பாதி துக்கத்துடனும் அதட்டினான். "இந்த வேதாந்தங்களும், புத்திமதிகளும், பாட்டும், ஸ்லோகமும் உன் போன்றவர்களுக்குரியன. இந்த வயதிலா நான் இவையெல்லாம் கற்றுக்கொள்ளப் போகிறேன்? காடு வா வா என்கிறது வீடு போ போ என்கிறது" என்று சொல்லித் தயங்கி நிற்கும் பெண்ணைப்பார்த்து மேலும் சொல்ல வாயெழாமல் ஒரு கையால் முகத்தை மூடிக்கொண்டு மற்றொரு கையால் போகும்படி சைகை செய்தான்.

சரஸ்வதி பதில் சொல்லப் பயந்தவளாய் தன் கிழிசல் சொக்காயை மாட்டி அழுக்குப் பாவாடையைக் கட்டிக்கொண்டு பள்ளிக்கூடம் போக ஆயத்தப்பட்டாள். அவள் மனம் படபடப்புடன் பகவானைத் தோத்திரம் செய்துகொண்டிருந்தது. "ஏ! தயாநிதீ! பரந்தாமா! ஒருபாவமு மறியாத பேதை நான். என்னைப்பற்றியாவது என் தந்தையை க்ஷமித்துக் கரையேற்ற முன் வாராயோ!" என்று தியானஞ் செய்துகொண்டே தன் பாடபுத்தகங்களில் ஒன்றாகிய "செய்யுட்கோவை"யை மேஜைமேல் வைத்தாள்.

பாடல் புத்தகத்தைத் தன் தந்தை அடிக்கடி முன்பு படிப்பதைப் பார்த்திருந்த பெண் இப்பொழுதும் படிக்கலாமென்று மேஜைமேல் வைத்து விட்

டுப் போவாள். ஆனால் புத்தகம் வைத்த இடத்திலேயே இருக்கும். இருந்தும் விடாமுயற்சியின் வெற்றியில் நம்பிக்கை யுடையவளாதலால் மறுபடியும் புத்தகத்தை தன் தகப்பன் வழக்கமாக உட்காரும் இடத்தின் பக்கம் வைத்து விட்டுப் போனாள்.

இந்தத் தடவை அவள் எதிர்பார்த்தபடியே லோகநாதன் புத்தகத்தை எடுத்துப் படித்தான். ஏன் படித்தானென்று ஒருவராலும் சொல்ல முடியாது. ஒருவேளை துக்கத்தை மறக்கப் படித்தானோ? அல்லது செய்ய வேறு வேலையில்லாததால் புத்தகத்தைத் திறந்தானோ? சித்தம் பிடித்தவன் தன்னை யறியாமல் செய்யுங் காரியங்கள்போல் இவனும் அலட்சியத்துடன் பக்கங்களைப் புரட்ட ஆரம்பித்தான். அவன் மனக் கொதிப்பில் ஆழ்ந்து ஊன்றிப் படிப்பதென்பது அசாத்தியம். செய்யுட்கள் தனித்தனியாகவே இருந்தபடியால் தன்னை யறியாமலே சிலவற்றைப் படிக்கலானான். எந்தப்பக்கம் புரட்டினாலும் எந்தப் பாட்டைப் படித்தாலும் தனக்காகவே எழுதப்பட்டவை போலிருந்தன. இந்தப் பக்கத்தில் கட்குடியின் கெடுதல்கள்! அந்தப் பக்கத்தில் சோரத்தின் தீங்குகள்! இங்கே சிக்கனம்! அங்கே விடாமுயற்சியின் வெற்றி! இங்கே சூதாட்டத்தின் தீமைகள்! அங்கே தீயாரின் உறவின் கேடுகள்! கடைசியாக கடவுளின் காருண்யம்! மகிமை! இவைகளைப்பற்றி இரண்டொரு வரி படித்தான்.

இவ் விஷயங்களைப் பகுத்தவுடன் அவனுக்குத் தெரியாமல் ஓர் ஞானோதய மாயிற்று. ஆ! இது ஒரு அசரீரி வாக்கோ வென்று பிரமித்தான். சுற்றிலும் பார்த்தான். ஒருவருமில்லை. "பாப கிருத்தியங்கள் செய்திருந்தாலும் அவைகளுக்காக வருந்தி மறுபடியும் நல்வழியில் இறங்குகிறே னென்று சத்தியம் செய்கிறவனை நான் க்ஷமிப்பேன். மன்னிப்பதல்லாமல் அவன் நன்மார்க்கத்தி லிறங்குவதற்கும் உதவியா யிருப்பேன்," என்ற பாகத்தைத் திருப்பித் திருப்பி நான்குதரம் படித்தான். இது சத்தியமா? நான் இது வரைக்கும் பிரலாபித்து வருந்தியதும் என் துர்மார்க்கங்களைப் பற்றித்தானே. எனக்கு விமோசனமுண்டென்பது சத்தியமானால் என் கெட்ட வழக்க ஒழுக்கங்களை இன்றே விட்டு விட்டேன்," என்று சொல்லிக் களித்தான். "எத்தனையோ தரம் பிரயத்தனம் செய்தவனுக்கு இன்னும் ஒருதரம் பிரயத்தனம் செய்வதுதானா பிரமாதம்."

* * * *

அரைவயிற்றுக் கஞ்சி குடித்துவிட்டுத் தட்டுத் தடுமாறிக்கொண்டு ஒட்டிக்கொள்ளுகிற வெய்யிலில் தலைக்கும் காலுக்கும் ஒன்றுமில்லாமல் சரஸ்வதி தனியே நடந்து போய்க்கொண்டிருக்கிற சமயத்தில் அவ்வூர்ப் பேட்டையில் இரண்டாவது மாடியில் டிஸ்டிரிக்ட் போர்ட் பிரஸிடெண்டும் பிரபல கனவானுமான நாராயணசாமி ரெட்டியார் மடியில் அவர் அரும் புதல்வி மீனாக்ஷி உட்கார்ந்துகொண்டு செல்லமாய்க் கொஞ்சிக்கொண்டிருந்தாள். "அதெல்லாம் இருக்கட்டும் அப்பா! நேற்று நான் கேட்டதெல்லாம் கொடுக்கிறே னென்றீர்களே, அது நிச்சயந்தானே! கேட்கட்டுமா?" என்றாள் மீனாக்ஷி. "உனக்கு இதமானதும், என்னால் கொடுக்கக் கூடியதுமானால் கொடுக்கிறேன்" என்றார் ரெட்டியாரும். "உம்மால் கொடுக்கக் கூடியதே. என்னுடன் கூடப் படிக்கும் சரஸாவின் தகப்பனாருக்கு வேலைபோட்டுக் கொடுத்து மறுபடியும் அவரை

வேலையில் வைத்துப்பாருங்கள். அதுவே எனக்கு இதம். அப்பா! வாக்குத் தப்பக் கூடாதென்று மீண்டு மன்றாடினாள். "லோகநாதனையா மறுபடியும் நான் வேலையில் வைத்துப் பார்க்கவேண்டும்? அவனைத்தான் ஒரு தரத்துக்கு இரண்டு தரமாக வைத்துப் பார்த்தாய்விட்டதே," என்று ரெட்டியார் சொன்னார்.

"அவருக்காக அல்ல, அவர் மகளுக்காக! வாய்க்கு வாய் எனக்கு சரஸாவை அம்மா உதாரணமாகக் காட்டவில்லையா? பொறுமைக்கும், படிப்புக்கும், வேலைக்கும், அடக்க ஒடுக்கங்களுக்கும் அவளைக் கண்டு மகிழ்ந்து அவளைத்தான் பெண்ணாகப் பெறும் பாக்கியமில்லாமற் போயிற்றே என்று உங்களிடஞ் சொல்லிச் சொல்லி வருந்தவில்லையா? என்னுடைய வகுப்பிலும் அவள்தான் முதலாக இருக்கிறாள். அவள் அன்னை சாகுந் தறுவாயிலிருந்த போது அவளுக்குப் பெண்ணுக்குப் பெண்ணு தாதிக்குத் தாதியும் வைத்தியனுக்கு வைத்தியனாகவுமில்லையா? சாப்பாட்டிற்கு வழியில்லாமல் அரை வயிறும் பட்டினியுமிருக்கிறாள். தன் கதியை நினைத்தே ஏக்கம் பிடித்துப் பைத்தியக்காரி போலிருக்கிறாள். பேசக்கூடச் சக்தியில்லை. அவளைக் கண்டு ஒவ்வொரு நாள் வாத்தியார்கூட கண்ணீர் உதிர்க்கிறார். அவளைக் கண்டு பரிதாபப்படாதவர் ஒருவருமிரார். அவளை நீங்கள் ஒருமுறை பார்த்திருந்தால் நான் இவ்வளவுதூரம் சொல்ல அவசியம் இருந்திராது. தகப்பன் செய்த குற்றங்களுக்கு அவள் பிணையா?" என்று மீனாக்ஷி மீண்டும் வற்புறுத்தினாள்.

"உன் தோழிக்காக நீ அவ்வளவு வருந்துவதானால் அவள் வந்து நம் வீட்டிலிருக்கட்டும். மற்றப்படி நம் வீட்டிலுள்ள சௌகரியங்களை அவளும் அனுபவிக்கட்டும். அவன் எக்கேடாய்ப் போனாலும் போகட்டும். அவன் மகள் ஒரு குறைவுமில்லாமல் நம் வீட்டில் வளரட்டும்," என்று அலட்சியமாகச் சொன்னார் தந்தை.

"ஆனால் அவள் சுகித்திருக்கமாட்டாள். மனைவியிழந்த தந்தை நாளுக்கு நாள் அதோகதி யடைவதை யறிந்து அவள் வேறொரு இடத்தில் சுகமாக வாழச் சம்மதிப்பாளா? என்னதான் சௌகரியங்கள் அனுபவித்தாலும் அவள் மனதிற்கு அமைதியும் சுகமும் அவை கொடுக்குமா? நீங்கள் வீணாய் வார்த்தை வளர்க்கிறீர்கள். வாசலில் டிரைவர் ஹாரனை அடிக்கிறான். பள்ளிக்கூடத்தில் மணி யடித்துவிடுவார்கள். ரெட்டியார் மகளே லேட்டாய் வந்தாலெப்படியென்று வாத்தியார் ஏசுவார். மறுபடியும் அவரை வேலையில்வைத்துப் பாரும். இதுதான் என் கோரிக்கை. உம்மிடமாவது எங்காவது வேலைகிடைப்பது கடைசித் தரமென்று தெரிவித்த பின்னாவது உணர்ச்சியுடன் கரையேற மார்க்கம் ஏற்படட்டும். வாக்குக் கொடும் வாக்குக்கொடும்" என்று மகள் பதறினாள்.

நாராயணசாமி ரெட்டியார் உத்தியோக முறையில் கடுமையாயிருந்தாலும் சுபாவத்தில் தரும சிந்தையும் தயாள குணமுமுடையவர். பெரிய குடித்தனக்காரர். எதையும் அவசரத்தில் செய்துவிடமாட்டார். "எல்லாம் எனக்குத் தெரியும் போ. இங்கே நின்றுகொண்டு குதிக்காதே, குழந்தைகள் குழந்தைகள் சமாசாரத்தோடு நின்றால் அவர்களுக்கு அழகாயிருக்கும். அதல்லாமல்........." என்று மேலும் சொல்லுவதற்கு முன் மீனாக்ஷி "அப்பா! அப்படியெல்லாம் சொல்லக்கூடாது. நான் சரஸாவின் ஸ்திதியிலிருந்து அவள்

என் ஸ்திதியிலிருந்தால் சரஸா தகப்பன் இவ்வளவு அலக்ஷியமாக பதில் சொன்னானென்று கேட்டால் உமக்கு எப்படியிருக்கும். நீருமல்லவா மூன்று முறை பொறுக்கிறதென்கிறீர்கள். நீங்களும் இப்படிக் கைவிட்டால் அவர்களை ஆபத்துக்காலத்தில் யார் கைகொடுத் துதவுவார்கள்?'' என்று முழுந்தாளிட்டு மறுபடியும் சரஸ்வதிக்காக வாதிக்க ஆரம்பித்தாள். அதற்கு ரெட்டியார், அவர்கள் நம்மை நம்பித்தானா பிறந்தார்கள். எறும்பு முதல் யானைவரை சித்தமகிழ்ந்தளிக்கும் தேசிகன் அவர்களையும் காப்பாற்றிவிட்டுப் போகிறான். இதற்கு நீ விசாரப்பட்டு முடியுமா? என்று சமாசாரம் தண்மையரனதாயிருந்தாலும் அதட்டிச் சொல்லிய காரணத்தால் செல்வப் புதல்வி மனம் பொறாமல் சரேலென்றெழுந்து ''இன்று சாயந்திரத்துக்குள் நீங்கள் சொன்ன தேசிகன் இருக்கிறதையும் இல்லாததையும் பார்த்துவிடுகிறேன்'' என்று கீழ் சிதறிக்கிடந்த புத்தகங்களில் சிலவற்றை எடுத்துக்கொண்டும் சிலவற்றை விட்டுவிட்டும் விர்ரென்று கிளம்பித் தாரைதாரையாய்க் கண்ணீர் பெருக கீழே வாயிற்படியண்டை நின்றுகொண்டிருந்த காரில் தொப்பென்று வந்து விழுந்தாள். அடுத்த மூன்றாவது நிமிஷம் கார் பள்ளிக்கூடம் வந்துவிட்டது. தகப்பனுடன் பேசிவிட்டுக் கண்ணீருடன் போவதைக் கண்ட வேலைக்காரிகள் உள்ளே சாப்பிட உட்கார்ந்த யஜமானியிடம் தெரிவிக்க அந்தம்மாளும் சாப்பாட்டை அப்படியே விட்டுவிட்டுக் கையை அலம்பிக்கொண்டு நாலு எட்டில் மாடியிலிருந்த கணவனை யணுகி விருத்தாந்தங்களைக் கேட்டுத் தெரிந்து பதில் சொல்லப் பயந்தவளாய் ''ஊரார் குழந்தையை ஊட்டி வளர்த்தால் தன் குழந்தை தானே வளரு மென்பாளே...... மீனா முன்கோபி அவள் சாயந்திரம் சௌக்கியமாக வீடுவந்து சேரவேண்டுமே'' என்று தனக்குள் சொல்லிக்கொள்பவள்போல் ரெட்டியார் காது கேட்கும்படிச் சொல்லிவிட்டு கதவின் மறைவில் முந்தாணியால் கண்ணைத் துடைத்துக்கொண்டாள். ரெட்டியாரும் பார்த்துவிட்டார். அவருக்கும் மனது இளகிவிட்டது. இருந்தாலும் பிகுவிட்டுக் கொடுக்காமல் ''மீனாவின் தாய்தானே நீ.... ...'' என்று குமாஸ்தாவைக் கூப்பிட்டு ''அம்மாளைக் கீழே கொண்டுபோய் விட்டுவிட்டு நீ இங்கேவா'' என்று சொன்னார். குமாஸ்தாவும் அப்படியே யஜமானியம்மாளுக்குத் தக்க சமாதானஞ் சொல்லிவிட்டு மறுபடியும் சாப்பாட்டுக்கு வேண்டிய ஏற்பாடு செய்துவிட்டு மாடியில்வந்து ரெட்டியார் முன்பாக வணக்கமாக நின்றார். ரெட்டியார் அவரைப் பார்த்து, ''ஓய்! நீர்போய் பெரிய தெருவிலிருக்கும் லோகநாதனை கையும் பிடியுமாய் இழுத்துக்கொண்டு வந்துவிட்டு மறு வேலைபாரும்,'' என்று ஆக்ஞையிட்டார். குமாஸ்தா மறைந்ததும் இன்னொரு குமாஸ்தாவைக் கூப்பிட்டு அந்தப் பயல் மறுபடியும் வேலையில் வைத்துக்கொள்ள வேண்டுமென்று போன மாதம் மனுக்கொடுத்தானே அதை உடனே எடும் என்று சொல்லி அதைத் தேடி எடுக்கச் சொன்னார் ரெட்டியார். சிறிது நேரத்துக்கெல்லாம் லோகநாதனும் குமாஸ்தாவும் வியர்க்க வியர்க்க வந்து நின்றார்கள். ''லோகநாதா! இரண்டுதரம் பொறுத்துப் பார்த்தும் பிரயோஜனப்படாமல் நான் உன்னைத் தள்ளியிருக்கிறேன், உன்னை ஆபீஸில் வைத்தால் அங்கே மற்றவர்களை உன் ஸ்திதிக்கு சீக்கிரம் கொண்டுவந்து விடுவாயென்றே உன்னை ஒழித்தேன். நீ மறுபடியும் வெட்கமில்லாமல் மனு கொடுத்திருக்கிறாயே! அடே! உனக்கு எத்தனை பேர் சிபார்சு!'' என்று ரெட்டியார் பரிகாசத்துடன் சிரித்தார். லோகநாதன் வணக்கத்துடன் ''சுவாமி, நான் ஒருவருடைய சிபார்சும் அண்டினவனல்ல.

தப்பபிப்பிராயம் கொள்ளக்கூடாது. சொல்வார் வார்த்தையைக் கேட்கக் கூடாது. ஈச்வரன் ஒருவனைத் தவிர நான் ஒருவனை சிபார்சுக் கண்டினவ னல்லன்......" என்று சொல்வதற்குள், ரெட்டியார் "அடே! ஈச்வரன்தான் உன்னை இந்த லோகத்துக்கெல்லாம் உள்ளாக்கி உன்னை சந்தியில் கொண்டு வந்து விட்டிருக்கிறுரே. இன்னும் ஈச்வரா என்று ஏன் பிதற்றுகிருய்...... அதெல்லாமிருக்கட்டும். இன்று உனக்குக் கடைசியாக ஒரு சமாசாரம் சொல்லுகிறேன். அதைக் கவனமாகக்கேள். உன்னுடைய கெட்ட வழக்கங்களாலே உன் வரும்படியனைத்தும் செலவழித்துவிட்டு நீ அழிந்துபோன தல்லாமல் உன் குழந்தைகளையும் அலைய விட்டுவிட் டாய். கையில் பணம் கிடைத்தால் அது மறுநாளே தொலைந்துவிடுகி றது. ஆகையால், நான் சொல்லுகிற யோசனைப்படி நீ செய்ய சம்மத மானுல் நான் மறுபடியும் உன்னை வேலையில் வைத்துக்கொள்ள சம்மதிக்கி றேன். உன் சம்பளத்தை உன் கையில் கொடேன். நானே வைத்துக் கொண்டு செலவழிப்பேன். ஆறு மாதத்திற்குப் பிறகு நீ ஒழுங்காயிருந்தால் உன்னை நம்பி உன் கையில் சம்பளத்தைக் கொடுக்கிறேன். அப்பொழுதுங் கூட உன்னை நான் முழுதும் நம்ப முடியாது. உன்னுல் உன்னிஷ்டப்படி செலவழிக்க முடியாத சில முறைகள் ஏற்படுத்திய பின்னே நீ உன்னிஷ்டம் போல் செய்ய விடுவேன். இப்பொழுது உன் சம்பளத்தில் டிஸ்டிரிக்ட் போர் டார் பிராவிடெண்ட் பண்ட் பிடிக்கிறுர்களே. அது வீணுகத்தானே கிடக் கிறது. என்னுடைய முயற்சியினுல் அதைத்கொண்டு ஓர் லைப் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸியைக் கொள்ள கவர்ன்மெண்டார் சம்மதித்திருக்கிறுர்கள். நீ சம்மதித் தால் நாங்களே ஒரு பாலிசி உன் பிராவிடெண்ட் பண்டைக்கொண்டு வாங்கி எங்கள் பேரில் வைத்துக்கொள்ளுகிறேம். நீ ஒழுங்காக பென்ஷன் வாங் குகிற காலத்தில் லாபத்துடன் கூடிய தொகையை உனக்குக்கொடுத்துவிடுகி றேம். அல்லது இதற்கு மத்தியில் இறந்துவிட்டால் நீ கட்டியது எவ்வளவு சிறியதாயிருந்தாலும் இன்ஷ்யூரன்ஸ் தொகை பூராவும் வாங்கி உன் மக்கட்குக் கொடுத்துவிடுகிறேம். இதல்லாமல் சௌ. சரஸ்வதிக்கு ஒரு கல்யாண பாலி சியும் சி. சுந்தரத்துக்கு ஒரு வித்தியாப்பியாச பாலிசியும் உன் சம்பளத்திலி ருந்து வாங்கிவிடவேண்டும். அப்படியானுல்தான் குழந்தைகளின் எதிர்கால க்ஷேமம் உத்திரவாதமடையும். உனக்கும் விருத்தாப்பியத்துக்கு ஒருவழி ஏற்படும். நீயும் இந்த ஏற்பாட்டை ஒப்புக்கொண்டு சரிவர நடத்திவந்தால் க்ஷேமமடைவாய். இதில் போட்ட பணத்தை திரும்பி நினைத்தபோது எடுக்க முடியாது. இது உன் போன்றவர்களுக்காகவே ஏற்பட்ட வழி யென்று நினைக்கிறேன். என்னசொல்லுகிறுய்," என்று ரெட்டியார் உருக்கமாகச் சொன்னதைக்கேட்ட லோகநாதன் "எல்லாம் ஆண்டவன் ஆக்ஞைப்படி. எனக் குப் பதில் சொல்லவும் உரிமையிருக்கிறதா" என்று வினயத்துடன் சொன்ன தைக்கேட்டு மகாதிருப்தியடைந்து உடனே அருகிலிருந்த குமாஸ்தாவைக் கூப்பிட்டு ஆர்டர் எழுதச்சொல்லி அன்றே அப்பொழுதே போய் வேலையிலம ரும்படி உத்தரவிட்டார்.

ஆறும்மாதக் கடைசியில் ரெட்டியார் லோகநாதன் சம்பளத்திலிருந்து சேர்த்துக்கொடுத்த பணத்தைக்கொண்டு சரஸாவுக்கும் சுந்தரத்துக்கும் நல்ல துணிமணிகள் வாங்கப்பட்டன. வெகுநாளாகக் கேட்காதிருந்த கெடிகாரத்தின் சப்தம் முன்னைவிடக் கணீரென்று கேட்பதுபோலிருந்தது. பூப்படங்களும் மேஜை நாற்காலிகளும் புஸ்தகங்களும் அதனதனிடத்துக்கு வந்துவிட்

டன. திருட்டுப்போன நகைகளும் மீட்கப்பட்டன. இவைகளையெல்லாம் பார்த்த சரஸ்வதி "அப்பா! இவைகளெல்லாம் எங்கே போயிருந்தன! இப்பொழுது எப்படி வந்தன? நாம் இப்பொழுது முன்பைவிடச் சுகமாயிருக்கவில்லையா? இதெல்லாம் எப்படி முடிந்த"தென்று கேட்க லோகநாதன் குழந்தையை வாரியெடுத்து மடிமேல் வைத்துக்கொண்டு "கண்மணீ! இன்று நாம் சந்தோஷமாயிருப்பது உண்மையானல் அதற்கு நான் உனக்குக் கடமைப்பட்டிருக்கிறேனென்று கடவுளறியச் சொல்லுகிறேன். நான் நாளுக்கு நாள் நிமிஷத்துக்கு நிமிஷம் அதோகதியடைந்து நரகத்துக்கு ஏற்பாடு செய்துகொண்டிருக்கும் காலத்தில் உன்னுடைய புத்திமதிகளும், ஹிதவார்த்தைகளும் உன் கண்ணீரும், உன் பிரார்த்தனைகளும், உன் பாட புத்தகமுமே என்னைக் காப்பாற்றிக் கரையேறும் வழியைக் காட்டின. உனக்கு நல்ல தந்தையாகவும், ரெட்டியாருக்கும் கடவுளுக்கும் நல்ல ஊழியனுமாக ஆனது உனக்கு விடா முயற்சியில் இருந்த நம்பிக்கையே," யென்று சொல்லித்தான் மீண்டுங்கொண்டுள்ள கல்யாண பாலிஸியையும் தன் ஜீவிய பாலிஸியையும் காட்டியதல்லாமல் இழந்த நிலத்துக்காக தாவா செய்து செலித்த தீர்ப்புக்காபியையும் காண்பித்தான்.

"முயற்சியுடையோர் இகழ்ச்சி அடையார்."

---




# மறைக்கொழுந்தும் நிறைக்கொழுந்தும்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

ஐம்புலன்களையும் அடக்கி ஆற்றும் அருந்தவத்தின் வலியால், இம்மையிற்செயற்கரும் செயல்களைச் செய்து, மறுமையிற் பெறுதற்கரிய பேரின்பம் எய்துதல் இயலும் என்னும் உண்மையைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னமே மன்னுயிர்க்கு உணர்த்திய நாடு பாரத நாடேயாகும். (முன்னாள்) இந்நாட்டில் வாழ்ந்த மன்னரும் முனிவரும், அரக்கரும் அறிஞரும், தவநெறியில் தலைப்பட்டு, எண்ணிய எண்ணியாங்கெய்தி, இனிது வாழ்ந்தார்கள். "மாசிலாக் கோசலம்" என்று புலவர் போற்றும் புகழமைந்த கோசல நாட்டை ஆண்ட கொற்றவனும் கடல் சூழ் இலங்கைக் காவலனாய் விளங்கிய இராவணனும், விழுமிய தவத்தின் வலியாலேயே விண்ணும் மண்ணும் போற்ற விளங்கு புகழ் பெற்று இலங்கினார்கள்.

"வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவம்
ஈண்டு முயலப்படும்"

என்னும் பொது மறையின் பொருளுரையைப் பொன்போற் போற்றிய மன்னர், கொழுந்தோடிப்படர் கீர்த்திக் கோ வேந்தராய் விளங்கினர். இலங்கை மாநகரின் எழுதரிய அழகினைத் தன் மெய்யுணர் கண்களாற் கண்ட மாருதி "இது தவஞ்செய்த தவமால்" என்று இலங்கேசனது தவப்பெருமையை மனமாரப் புகழ்ந்து போற்றினான்.

இவ்வாறு ஆக்குதற் கரிய அருந்தவம் இயற்றி, அத்தவத்தின் வலிமையால் அதிகாரச்சிறப்புற்ற ஆன்றோர் வாழ்ந்த இத்திருநாட்டின் செம்மையை, செஞ்சொற்கவிஞராய பாரதியார் எழுதிக்காட்டும் சீலம் அறிந்து இன்புறத்தக்கதாகும். பிறப்பென்னும் பேதமையறுக்குமாறு, போதி மரத்தின் நிழலில் அமர்ந்து பெருந்தவம் புரிந்த புத்தர் பெருமானது வடிவத்தை அழகொழுக எழுதிக்காட்டும் பாரதியார் மொழிகள் கற்போர் மனத்தைக் கவர்வனவாம்.

மண்ணரசாளும் உரிமையை மனமார வெறுத்து, விண்ணரசாளும் வேந்தனாக விளங்கிய புத்தர் பெருமானது அகத்தின் செம்மையை அவர் முகத்தின் அழகினால் கவிஞர் செவ்வையாக அறிவுறுத்திப் போந்தார். கருணைமொழியும் திருமுகமும், கண்ணிணைக்கவரும் காந்தியும், செற்றம் நீக்கிய சிந்தையும் வாய்ந்த செம்மை சான்ற வடிவமாக அப்பெருமானது திருவுருவம் கற்போர் மனத்தில் ஒளிர்கின்றது. இவ்வாறு தவப்பெரியாரது திருவுருவங்களைக் கற்போர் மனக்கண்ணெதிரே உயிர் ஓவியமாய் எழுதியமைக்கும் திறம் வாய்ந்த இரு கவிஞரது கவிச் சித்திரம் ஈண்டு கருதத்தக்கனவாம்.

பக்திச் சுவை நனி சொட்டச்சொட்டத் தெய்வமணக்கும் செய்யுளால் அறுபான் மும்மை அடியாரது பெருமையை எழுதியமைத்த செந்தமிழ் சேக்கிழார், நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தரது வடிவத்தை நயமுற எழுதி அமைத்துள்ளார். வேத நெறி தழைத்தோங்கவும், சிவநெறி செழித்தோங்கவும், சீர்காழிப்பதியில் தோன்றி இளமையிலேயே உவமையிலாக்கலை ஞானமும் உணர்வரிய மெய்ஞ்ஞானமும் பெற்று நல்லியற் கவிஞராய் விளங்கிய 'ஞானசம்பந்தர்' பாண்டிநாடு செய்த பெருந்தவப்பயனாய் அங்கு வந்துற்றார். அடியார் திருமடத்தில் அமர்ந்திருந்த சிவஞானச் செல்வரைக்கண்டு அடிபணிந்து அரண்மனைக்கு அழைத்து வரச்சென்ற அமைச்சராகிய குலச்சிறையாரும், மன்னன் தேவியாகிய மங்கையர்க்கரசியாரும், அத்திருமடத்திற் கண்ட காட்சியைச் செழுந்தமிழ் வல்ல சேக்கிழார் எழுதிக் காட்டும் சீலம் சாலச் செம்மை வாய்ந்ததாகும்.

> "ஞானத்தின் திருவுருவை நான்மறையின் தனித்துணையை
> வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக் கொழுந்தை
> தேனக்க மலர்க் கொன்றைச் செஞ்சடையார் சீர் தொடுக்கும்
> கானத்தின் எழு பிறப்பைக் கண் களிப்பக் கண்டார்கள்"

என்று சேக்கிழார் அருளிப் போந்த செந்தமிழ்க்கவியின் நயம் அறிந்து மகிழத் தக்கதாகும். திருஞானசம்பந்தப் பெருமானைக் காணச்சென்ற மெய்யன்பர் இருவரும் அத்திருமடத்தில் பால்மணம் மாறாத பாலனைக்கண்டாரல்லர். பவளம்போல் மேனியிற் பால் வெண்ணீறு துதைந்த படிவத்தைக் கண்டாரல்லர். குழலினும் இனிய மழலை மொழி பேசும் ஓர் குழந்தையைக்கண்டாரல்லர். பின் எதனைக் கண்டாரென்றால், ஞானத்தின் திருவுருவைக் கண்டார்கள். நான்மறையின் நற்றுணையைக் கண்டார்கள். மண்ணுலகில் மிளிரும் மதிக்கொழுந்தைக் கண்டார்கள். பண்ணார்ந்த பாட்டின் இன்சுவையைக் கண்டார்கள் என்று சேக்கிழார் எழுதிய செழுந்தமிழ்ச் சித்திரம் எண்ணுந்தொறும் இன்பம் பயப்பதாகும். கன்னிநாடு கட்டழிந்து நின்ற நிலையினை நினைந்து நினைந்து நெஞ்சந்தளர்ந்த இருவர் கண்ணெதிரே ஓர் மெய்ஞ்ஞான வடிவம் மிளிர்வதாயிற்று. அஞ்ஞான இருளகற்றி மெய்ஞ்ஞான ஒளி

விரிக்கும் ஞானத்தின் திருவுருவை மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் அத்திருமடத்தில் கண்டார்கள். இன்னும் புறச்சமய மேகத்தால் மங்கியிருந்த வேத விழுப்பொருளை மீண்டும் இம்மண்ணுலகில் விளக்கவந்த விரிசுடரைக் கண்டார்கள். வேத நெறியினை இழித்துரைத்த விரிவிலா அறிவிேனோரை வாதில் வென்று வேதநெறி பரப்ப நின்ற விளங்கொளியைக் கண்டார்கள். இன்னும் கண்டோர் மனத்தைக் கவர்ந்து குளிர்விக்கும் முற்றியகலையிற்றூய முழுமதியைக் கண்டார்கள். இன்னும் பிறவாயாக்கைப் பெரியோன் பெருமையைக் குழலும் யாழும் குழையப் பண்ணார்ந்த மொழிகளிலமைத்துப் பாடிய பழுதற்ற பெருமையைக் கண்டார்கள். பண்ணொன்ற இசைபாடும் அடியார்க்கு எளியனாய் மண்ணின்றி விண் கொடுக்கும் மணிகண்டனது இசையை இழுமென் மொழிகளால் இசைக்கும் செஞ்சொற்கவியின் செம்மை சான்ற இன்பம் அத்திரு மடத்தில் சிறந்து இலங்கக் கண்டார்கள். இவ்வாறு பாண்டிநாட்டில் சிவமணமும் தமிழ் மணமும் கமழச்செய்த திருஞானசம்பந்தரைக் காணச்சென்ற அறிஞர் இருவரும் அங்கு அவர் ஊனுடம்பைக்காணாது உயரிய ஞானத்தின் திருவுருவைக்கண்டார் என்றும், வேதிய வடிவத்தைக் காணாது வேதத்தின் தனித்துணையைக் கண்டார் என்றும், புத்தமுதம் பொழியும் புனிதமேனியைக் காணாது மண்ணில் வளரும் மதிக்கொழுந்தைக் கண்டாரென்றும், குதலைமொழி பேசும் மதலையைக் காணாது செஞ்சடைக்கடவுளின் சீர் தொடுக்கும் செம்மைசான்ற கவிச்சுவையைக் கண்டார் என்றும், சேக்கிழார் அமைத்த சொல்லின் சுவையும் பொருளின் நயமும் அறிந்து போற்றத் தக்கனவாம்.

இவ்வாறே கல்வியிற் பெரியராய கம்பர் இலங்கைமாநகரில் சிறையிருந்த சீதையின் செம்மையை அநுமன் வாயிலாக இராமனிடம் அறிவிக்கப்போந்த போது,

> "விற்பெருந்தடந் தோள்வீர வீங்குநீர் இலங்கை வெற்பில்
> நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேனல்லேன்
> இற்பிறப்பென்ப தொன்றும் இரும் பொறையென்ப தொன்றும்
> கற்பெனும் பெயரதொன்றும் களிநடம் புரியக்கண்டேன்."

என்று அருளிய வளமார்ந்த மொழிகள் அறிந்து இன்புறத் தக்கனவாம். "ஐயனே !! இருங்கடல் சூழ்ந்த இலங்கை என்னும் குன்றில், புல்லினால் தொடுத்த தூயபர்ணசாலையில், மாற்றாத ஆடையோடும் மாசடைந்த மேனியோடும் கங்குலும் பகலும் கண்ணிமையாது கணவனையே கருத்தில் அமைத்து நாற்றிசையும் நோக்கிக் கண்ணீர் உகுத்த நற்பெருந் தவத்தளாய நங்கையைக் கண்டேன் அல்லேன்; ஆனால், செந்தேன் துளிக்கும் அச்சோலையில் குலநலம் குன்றாது ஒளிரக் கண்டேன்; பொறுமை யென்னும் பெருங்குணம் பிறங்கக் கண்டேன்; கற்பென்னும் திண்மை களித்து நடம்புரியக் கண்

டேன்;" என்று அஞ்சனவண்ணனை நோக்கிக் கூறும் அனுமனது மொழிகள் எஞ்சாத இன்பம் விளைவிப்பனவாம். இலங்கைமாநகரில் சிறையிருந்த செல்வியை நாடிச்சென்ற அநுமன் அம்மங்கையை அசோகவனத்திற் கண்ட போது,

> "பேணநோற்றது மனைப்பிறவி பெண்மைபோல்
> நாணநோற் றுயர்ந்தது நங்கை தோன்றலால்
> மாணநோற்று ஈண்டிவள் இருந்த வாறெலாம்
> காணநோற்றிலன் அவன் கமலக்கண்களால்."

என்று ஆடிப்பாடி அகங்களிப்பானுயினன்; பிறந்த குலப் பெருமையையும் புகுந்த குலப்பெருமையையும் விளக்கி நின்ற பெண்ணின் நலமறிந்த அநுமன் அம்மங்கையைக் காணும் பேறுபெற்றமையை நினைந்து பெருமகிழ் வெய்தினன். தான்கண்ட காட்சியைத் தன் தலைவனான கமலக்கண்ணன் காணும் பேறு பெற்றிலனே என்று வாடி வருந்தினன். இவ்வாறு கண்ட மங்கையின் கோலத்தைப் பின் ஐயனான அஞ்சனவண்ணனிடம் எடுத்துரைக் கும்போது "ஐயனே! இலங்கைமாநகரில் இருந்த மாநிலம் செல்லரித்திட மெய்த்தவம் புரியும் ஓர் மங்கையைக் கண்டேனல்லேன். ஊணிலாயாக்கை பேணி உயரிய தவம்புரியும் ஊன் உடம்பைக் கண்டேன் அல்லேன்; கணவனையே கருத்திலமைத்துக் கடுந்தவம் புரியும் ஓர் காரிகையைக் கண்டேனல்லேன். மிதிலைமன்னனது திருமனையில் வளர்ந்த மங்கையின் குலநலம் அங்குக் குன்றாது இலங்கக் கண்டேன்; கணவனைப் பிரிந்த கடுந்துயரையும் பொறுத்து கருமனத்தரக்கரது மிகுதியைத் தன் தகுதியால் வென்ற மங்கையின் இரும்பொறை இலங்கக்கண்டேன்; கற்பென்னும் திண்மை களித்து நடம்புரியக் கண்டேன்; என்று சொல்லின் செல்வன் கூறும் முறை கவிச் சுவை அறிந்தோர்க்குக் கரும்பினும் இனிப்பதாகும்.






# ஏழைகளுக்கு உரிமைப் பத்திரமளித்த ஹென்ரி I

———:(o):———

(T. S. ராஜகோபாலன், *B. A. L. T.*)

ஆங்கிலோ சாக்ஸனியரை அடிமைப்படுத்திய வெற்றி வீர வில்லியம் சற்று நிதானித்து, பெரும்பாலான ஏழை யடிமைகளுக்குச் சற்று பரிவு காட்டினாலும் முதலில் அவர்களைப் படாத பாடு படுத்திய பிறகே அவ்விதம் செய்தான் என்பதை முன் கதையில் சொல்லப்பட்டது. ஆங்கிலோ சாக்ஸனியரின் மனதில் பயங்கரத்தை உண்டாக்கச் சில கிராமங்களை இங்கிலாந்தின் தென்பாகத்தில் பூராவாய் நாசமாக்கி அந்தக் காலத்திலேயே ஒரு காடு தயாராக்கினான். அதற்குப் புதுக்காடு எனப் பெயர் வந்தது.

"பெற்றோர் செய்த பாவங்கள் பிள்ளைகளின் தலைமேலே" என்பதற்கொப்பவும், மிகவும் முரட்டுச் சுவபாவத்துடன் கூடிய குரூர குணமுடையவனாகவும், தகப்பனார் மதிப்புக் கொடுத்து வைத்திருந்த மதஸ்தாபனம், மத குரு இவர்களுடன் போராடியவனாகவும் இருந்த வில்லியம் II அல்லது சிகப்புத் தாடி வில்லியம் என்ற ஜெயவீர வில்லியமுடைய மகன், மேற்சொன்ன புதுக்காட்டில் வேட்டையாடிக்கொண்டிருந்தபோது யாரோ ஒரு வீரனால் அம்பினால் எய்யப்பட்டு துன்மரண மடைந்தான்.

அந்தச் சிகப்புத் தாடி வில்லியமின் அடுத்த சகோதரன், நார்மண்டி பிரபு ராபர்ட் என்றிருந்த ஒருவன் அச்சமயம் ஐரோப்பாவில் நடந்து வந்த மத யுத்தத்தில் (Crusades) ஈடுபட்டிருந்தான். அவனுக்கும் அடுத்த தம்பி ஹென்ரி என்ற ஒருவன் இங்கிலாந்திலேயே யிருந்தவன் "காற்றுள்ளபோதே தூற்றிக் கொள்" என்றபடி சடுதியில் இங்கிலாந்து சிம்மாசனத்தைக் கைப்பற்றினான். இவனுக்கு முதலாவது ஹென்ரி என்ற பெயர் ஏற்பட்டது.

இந்த ஹென்ரி I-க்குத் தன் உரிமையில் குறைவு தெரியுமாதலால், ஜனங்களின் பிரியத்தைச் சம்மதிக்கச் சில ஏற்பாடுகள் செய்துவைத்தான். முதலாவதாகத் தன் தமையனுடைய குரூர செய்கைகளுக்கு உதவியாயிருந்து குடிகளை வருத்திய கசடர்களை வேலைகளினின்றும் விலக்கித் தன்

னிஷ்டப்படி ஒழுங்காய் நடக்கும் உத்தியோகஸ்தர்களை நியமித்தான். அவர்களும் ஒழுங்காய் நடக்கின்றார்களா என்று கண்காணிக்க ஒற்றர்களை நியமித்தான்.

தங்கள் தங்களுக்கென நியாய சபைகளை வைத்துக்கொண்டு ஏழை மக்களை வறுமையிலாழ்த்தி வந்த நார்மனிய பிரபுக்களின் அநியாயங்களைச் சீர்படுத்த என்று தனக்குக் கட்டுப்பட்ட, தன் சொல் கேட்கும், நியாயாதிபதிகளை நாட்டின் பல பாகங்களில் சுற்றிவரச்செய்து நியாயம் வழங்கிவர ஏற்பாடு செய்தான். இந்த முறைக்கு "முகாம் நியாயாதிபதிகள் முறை" (The System of Circuiting Judges) என்று பெயர்.

கேவலம் நாய்களினும் கேடான அடிமைகள் என நார்மனியரால் கருதப்பட்ட ஆங்கிலோ சாக்ஸனியரின் மனங் குளிரும்படியாக, ஆங்கிலோ சாக்ஸனிய மரபின் வழி உதித்த மெடில்டா (Matilda) என்ற ஸ்காட்லந்து இளவரசியை மணந்துகொண்டான். இக்காரியம் பெரும்பாலான ஆங்கிலோ சாக்ஸனியருக்குப் பேராதரவு அளித்தது என்பதைச் சொல்லவும் வேண்டியதில்லை. ஏனெனில் தங்கள் குல ராணி என்றதில் பெரிதும் மனமுவந்து பெருமை கொண்டனர் ஏழை அடிமை ஆங்கிலேயர்.

சடைசியாக ஏழை மக்கள் விசாரணையின்றி சிறையி லிடப்பட மாட்டார்கள் எனவும், நாட்டின் அறிவாளி சபையான விட்டன் சபையின் சம்மதம் பெறாதபடியான எந்த வரியையும் விதிப்பதில்லை எனவும், மக்களின் சொத்துக்கள் அகாரணமாய் பறிமுதல் செய்யப்படாதெனவும், நார்மனிய பிரபுக்களின் கொடுமைகளைத் தாராளமாய் தன்னிடமோ, தன் உத்தியோகஸ்தரிடமோ தெரிவித்துக்கொள்ளலா மெனவும் போன்ற பல ஜீவாதாரமான பிரஜா உரிமைகளை உள்ளடக்கிய தோர் உரிமைப் பத்திரத்தை வெளியிட்டு ஏழை மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டான். இவ்வாறு நாட்டில் உள்ள பெருவாரியான ஏழை மக்களின் அன்பைச் சம்பாதித்த ஹென்றி I இடம் நார்மனிய பிரபுக்களான "சில்லண்டி தெய்வங்களின் வாலாட்டம்" நடவாதன்றோ ? ஆயினும் அவர்கள் மனம் குமுறிக்கொண் டிருந்தனர் என்பது சொல்லாமலே விளங்கும்.

மற்றப்படி இந்த அரசன் காலத்தில் ஒரு முக்கிய சம்பவம் நிகழ்ந்தது. அதாவது தேசமுழுவதிலும் மதபோதனை பரவியதன் காரணமாக பல துறவிகளும், துறவிப் பெண்களும் ஏற்பட்டு சமூக ஊழியமும் பஞ்சக்கஷ்ட நிவாரணமும், கல்வி போதனையும் செய்து வந்ததன் பலனாக பல மடாலயங்களும், மடாதிபதிகளும், மாதா கோவில்களும், மத குருமார்களும் நிறைந்தனர். இவர்கள் செய்துவந்த பொது தர்ம கைங்கர்யங்களின் அனுதாபத்தினாலும், பிரியத்தினாலும், தர்ம சிந்தனையாலும் தூண்டப்பட்ட பல பிரபுக்கள் அரசர்கள் மேற்படி ஸ்தாபனங்களுக்கு மானிய சொத்துக்கள், செல்வமாகவும், பொருளாகவும், நிலமாகவும் கொடுத்து வைத்தார்கள். நார்மனிய வில்லியம் காலத்தில் பிரார்த்தனைக்காக வென்றும் நிலங்கள் விடப்பட்டதை வாசகர்கள் மனதிலிருத்துவார்களாக. இம்மாதிரி ஆக ஏற்பட்ட நிலங்களுக்கும் சொத்துகளுக்கும் இங்கிலாந்தின் பொதுமத குருவும், மத விஷயங்களில் தலைமையாக இருந்த காண்டர்பரி மதகுரு பாத்தியஸ்தராகவும் தலைவராகவும் ஆனார்.

ஆகவே பிரபுக்களிலெல்லாம் மிகச் சிறந்த செல்வாக்குள்ள ஆள் கட்டுப் பாடுள்ள பெரிய பெரிய நிலச் சொந்தக்காரர் ஆனுர் காண்டர்பரி மத குரு. அச்சமயம் ஆன்ஸெல்ம் (Anselmn) என்பவர் மதகுரு. ஆக இந்த மதகுரு நிலச்சுவான்தார் ஆனதால் அரசனுக் கடங்கியவரா? அல்லது மதகுரு (கடவுளின் பிரதிநிதி) என்ற முறையில் அரசன் அவனுடைய நிலங்கள் பிரபுக்களுமடங்கிய சகலரும் அவருக் கடங்கியவர்களா? என்ற வாக்கு வாதம் ஏற்பட்டு விட்டது. இதே மாதிரியான பெரியதொரு வாக்கு வாதம் ஐரோப்பாவிலும் போப் என்ற பெரிய மதகுருவுக்கும், சக்கரவர்த்தி என்ற பெரிய அரசனுக்கும் நிகழ்ந்தது. ஆயினும் இருதரப்பினரும் நிதான புத்தியுடன் இங்கிலாந்தில் நடந்துகொண்டதால் சீக்கிரத்திலேயே ஒரு சமரஸ முடிவு ஏற்பட்டது. அதாவது ஆர்ச் பிஷப் (மதகுரு) ஆகவேண்டியவர் முதலில் தம் நிலங்களுக்காக அரசனுக்கு மற்ற பிரபுக்களைப்போல உள்ள முறைப்படி வணங்கி ராஜ விசுவாசப் பிரமாணம் செய்துகொள்ள வேண்டியது. உடனே பிரதம மத குரு சின்னங்களான உடை, தலையணி, கயிறு, தண்டம், சூலம்போன்ற ஓராயுதம் இவைகளை அவருக்கு அரசன் கொடுத்து தரித்துக்கொள்ளவேண்டியது. உடனே அவர் மதகுரு (கடவுளின் பிரதிநிதி) என்ற முறைக்கு அரசன் சாமானியரைப்போல வணங்கி ஆசிபெற வேண்டியது என்பதே. இந்தச் சச்சரவுக்கு சரித்திரத்தில் "மத உத்தியோகச் சின்ன சச்சரவு" (The Investiture Struggle) எனப் பெயர் வழங்கும்.

மற்றொரு சம்பவம் துக்ககரமான சம்பவம். அதாவது, அரசனுடைய மகள் மெடில்டா இளவரசியும், வில்லியம் என்ற இளவரசனும் ஒருசமயம் நார்மண்டி நாட்டுக்கு கப்பல் பிரயாணம் செய்கையில், குடி வெறியில் தலை புரண்டிருந்த மாலுமிகளின் அஜாக்ரதையில், அந்த வெள்ளைக்கப்பல் ஓர் பாறையில் மோதுண்டு மூழ்கியது. சகோதரியைக் காப்பாற்றச் சென்ற இளவரசன் மூழ்கி யிறந்தான். இந்தத் துக்க சம்பவத்திறகு வெள்ளைக்கப்பல் சம்பவம் எனப் பெயர். அந்த சோகத்திலாழ்ந்த அரசன் அதுமுதல் சந்தோஷக்குறி ஒன்றுமே யில்லாமல் மீதி வாழ்நாளைக் கழித்து இறந்தான். அவனுக்கு வார்சாக வெள்ளைக்கப்பல் ஆபத்தில் தப்பிய மாடில்டா இளவரசியையே முரட்டு பிரபுக்கள் ஒப்புக்கொள்ளவேண்டும் என்று பரிதாபகரமாய் வேண்டிக்கொண்டு இறந்தான்.

ஆனல் பிரபுக்கள் சிலர் ஒப்புக்கொண்டாலும் வேறு பலர் ஒப்புக்கொள்ளாமல் உண்டான வார்சு பாத்தியக் குழப்பமும், அதுமுடிந்து மெடில்டாவின் மகன் ஹென்ரி, பட்டத்திற்கு வந்து அரசாட்சி நடத்திய கதை அடுத்து வரும்.

---

**பெரிய தொங்கு பாலம்:**—ஸ்வீடனைச் சேர்ந்த ஸ்டாக்ஹோம் பிரதேசத்தில் ஆர்ஸ்டா ஏரியின் மீது ஒரு தொங்கு பாலம் கட்டப்பட்டிருக்கிறது. இந்த ரயில் பாலத்தின் மொத்த நீளம் 700 மீட்டர்கள். இது நான்கு ஆண்டுகளில் கட்டி முடிக்கப்பட்டதாம். இதைக் கட்டி முடிக்க ஒரு கோடியே நாற்பது லக்ஷம் ஸ்வீடிஷ் குரோனர் நாணயங்கள் செலவழிக்கப்பட்டதாம்.

# ஜீவசத்துப் பொருள்கள்.
## (Vitamins.)

வீ. சங்கரையர்.

இக்காலத்தில் ஜீவசத்துப் பொருள்களைப்பற்றிய உபந்நியாசங்கள் அடிக்கடி பல பத்திரிகைகளிலும் காணப்படுகின்றன. ஜீவ சத்தைப்பற்றிய விவரம் இன்னும் பலருக்குச் சரியாக விளங்கி யிருக்கா தாகையால், அதைக்குறித்து யானும் ஒரு சிறிய விவரணம் எழுதத் துணியலானேன்.

ஜீவசத்துப் பொருள்களைப்பற்றிய எல்லா விஷயங்களும் இலகுவாகத் தெரிந்து கொள்வதற்காக அவைகளை முக்கியமாக ஐந்து பிரிவுகளாகப் பிரித்து அவைகளுக்கு முறையே ஏ, பீ, ஸி, டி, இ, என்று பெயரிட்டிருக்கிறார்கள். ஆகையால் இவ்வைந்துவித ஜீவசத்துப் பொருள்களும் நமது உடலில் சரியாகச் சேருபடி செய்யக்கூடிய ஆகாரத்தையே உட்கொள்ள வேண்டும்.

ஏதாவது ஒரு ஜீவசத்துப் பொருளானது நமது ஆகாரப் பதார்த்தங்களில் வெகுகாலமாக சேர்ந்து வராமலிருந்தால், அந்த ஜீவசத்துப் பொருளால் ஏற்படக் கூடிய சரீர, மனோசக்திகளுக்குத் தளர்ச்சி ஏற்படக் கூடும். ஆகையால் இவ்வாறு எந்தச் சக்தியில் குறைவு ஏற்பட்டிருக்கிறது என்பதை ஆராய்ந்து அதற்குத் தகுந்தபடி எந்த ஜீவசத்துப் பொருளை அடையவேண்டுமோ அதற்குத் தகுந்த உணவை உட்கொண்டு அக்குறைவு ஏற்படாமற் பாதுகாத்துக் கொள்ளவேண்டுவது நமது கடமை.

### 1. ஜீவசத்துப் பொருள்களின் தன்மை

(1) ஏ:—சுத்தமான கண்களையும், தீர்க்காயுளையும் கொடுக்கும்.

(2) பீ:—வளர்ச்சி, ஊக்கம், வீரியம்—இவைகளை உண்டாக்கி நாடிகளைச் சரியாக்கும்.

(3) கெட்டியான தசை நார்களை உண்டாக்கும். பற்களிலிருந்து, சீழ் வடிதல், இரைப்பை, குடல் ரணங்கள், ஜீரணசக்திக் குறைவு இவைகளைச் சரிப்படுத்தும்.

(4) டி:—எலும்பு வியாதிகளையும், இரத்தக் குறைவையும் சரிப்படுத்தும்.

(5) இ:—நபும்ஸகம் (மலட்டுத்தனம்) இல்லாமல் தடுக்கும்.

## 2. ஜீவசத்துப் பொருள்கள் கிடைக்கு மிடம்

(1) ஏ:—கறந்தபால், வெண்ணெய், மீன் எண்ணெய், பாலேடு, புதிதாகப் பறித்த பச்சைக்காய் கறிகள், தக்காளிக்காய்கள், சக்கரைவள்ளிக் கிழங்கு, பச்சைப்பட்டாணி இவைகளிலிருந்து கிடைக்கும். கண்வலி, மாலைக் கண் முதலிய கண் வியாதிகளையும், செவிடு, காதிலிருந்து சீவருதல் முதலியவைகளுக்கு மேற்கூறிய ஆகார பதார்த்தங்களை அதிகமாகச் சேர்த்து உண்ணவேண்டும்.

(2) பீ:—முழுக்கோதுமை ரொட்டி, தவிடு, தவிடு நன்றாகக் குத்தி எடுக்காத அரிசி, பச்சைக் காய்கறிகள், தக்காளிக்காய், கிழங்குகள், பழங்கள், புளித்தமா, கொட்டைகள், மிருகங்களின் சரீரத்துக் குள்ளிருக்கும் உறுப்புகள் இவைகளிலிருந்து கிடைக்கும். ஆனால் கோழிக்குஞ்சு முதலிய இளம் பிராணிகளிலில்லை. பசியின்மை, வளர்ச்சியின்மை, இவைகளா லேற்படும் அதிசாரம், மலச்சிக்கல் இவைகளைச் சொஸ்தப்படுத்த பீ ஜீவசத்துப் பொருள்களை உபயோகிக்கவும்.

(3) ஸீ:—எலுமிச்சம்பழம், ஆரஞ்சுப்பழம், முட்டைக்கோஸ், பசளைக் கீரை, பச்சை அவரைக்காய், முளை கிளம்பிய விதைகள், பச்சையிலை முதலியவைகளைப் புசிக்கின்ற மிருகங்களின் உறுப்புகள், பச்சைப்பட்டாணி இவைகளிலிருந்து கிடைக்கும். சொறிசிரங்கு, பற்களின் அழிவு, இரப்பை குடல் ரணங்கள், ஜீரணசக்தியின்மை முதலியவைகளை சொஸ்தப்படுத்த ஸீ ஜீவசத்துப் பொருள்கள் தேவை.

(4) டீ:—மீன் எண்ணெய், பால், முட்டை இவைகளிலிருந்தும், சூரிய வெளிச்சத்திலிருந்தும் கிடைக்கிறது. கருப்பத்திலிருக்கும் சிசு அங்கஹீனமில்லாம லிருக்கவும், எலும்பு வியாதி, ரத்தமின்மை முதலியவை தீரவும் டீ ஜீவசத்துப்பொருள் தேவை. ஆகையால்தான் நம் பெரியோர்கள் காலையில் சூரிய உதயத்திற்கு முன் சௌசம், ஸ்நானம், நித்தியகர்மானுஷ்டானாதிகளைச்செய்துவிட்டு சூரியன் உதிக்கும்பொழுது காலைவெய்யில் தேகத்தில் படும்படி சூரிய நமஸ்காரம் செய்யவேண்டுமென்று சொல்லி யிருக்கிறார்கள். இதனாலேயே இப்பொழுது ஜெர்மனி (Germany) முதலிய தேசங்களில் சூரிய கிரணஸ்நானம் (sun-bath) செய்வதற்காக வேண்டிய ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். வைத்தியர்களும் அல்டிராவையலெட் காந்தி சர்மத்தின் மீது படும்படி செய்யச் சொல்லுகிறார்கள். நம் முன்னோர்கள் நல்லெண்ணெயில் பல மருந்துச் சரக்குகளைப் பொடிசெய்து போட்டு சூரிய ஸ்புடம் வைத்து உபயோகிக்கச் சொல்லி யிருக்கிறார்கள். சுமார் $7\frac{1}{2}$-மணிக்கு மேலுள்ள சூரியகிரணம் உபயோகமில்லை யென்றும், ஆகையால் காலை $7\frac{1}{2}$-மணிக்கு முன் அசுவத்த (அரசமர)ப் பிரதக்ஷிணம் செய்ய வேண்டுமென்றும், அப்பொழுது காலை சூரியவெளிச்சம் அசுவத்தப் மரத்தினுடைய இலைகளின்

மீது பட்டு ஒருவித தேகாரோக்கியத்தை அதனடியி லிருப்போருக்குக் கொடுக்கிறதென்றும், நம் முன்னோர்கள் கூறி யிருக்கிறார்கள். 7½ மணிக்குமேல் அம்மாத்தடியில் தங்கவே கூடாது என்றும் கூறி யிருக்கிறார்கள். அதிலும் இதனால் அதிக நன்மை ஸ்திரீகளுக்கென்றும் கூறி யிருக்கின்றனர். கர்ப்பமாகாத ஸ்திரீகள் காலை 7½மணிக்குள் அசுவத்தப் பிரதக்ஷணம் செய்வார்களேயாகில் அவர்களுக்கு அசுவித்த மரத்தின் இலைகள் மூலமாகக் கிடைக்கும் அட்டிரா வையலெட் காந்தியினால் கர்ப்பாசயம் சுத்தமடைந்து கர்ப்ப மாவதற்குச் சவுகரியமான நிலைமையை அடைகின்றது. கர்ப்பிணிகள் கட்டாயம் ஐந்து மாதம் முடியும் வரையிலும் நித்தியமும் அசுவித்தப் பிரதக்ஷணம் செய்யவேண்டும். ஆறாவது மாதம் ஆரம்பித்தால் அம்மாத்தடியில் செல்லவே கூடாது. அதிலும் அரசும், வேம்பும் சேர்ந்திருக்கு மிடமே தகுந்தது. ஐந்து மாதத்திற்குள் கருப்பத்திலிருக்கும் சிசுவுக்கு கை, கால், மூக்கு, நுரையீரல், கல்லீரல், மண்ணீரல், குடல், இரைப்பை, வாய், ஆசனம், விரல்கள், நகங்கள், மயிர், இருதயம், முதலியவைகள் உண்டாகி பிண்ட உறுப்புகளெல்லாம் ஒரு விதமாகப் பூரண மடைகிறதால் அதற்கு முன்னமேயே அவைகளில் ஒன்றிலாவது ஒரு குறைவும் ஏற்படாமலிருக்கவே இவ்விதமாக அசுவத்தப் பிரதக்ஷணம் செய்ய வேண்டுமென்று சொல்லி யுள்ளார்.

(5) இ:—முட்டைக்கோஸ், முழுக்கோதுமை, மாமிசம், ஏராளமான பால், இவைகளிலிருந்துக் கிடைக்கின்றது. இதனால் மலட்டுத் தன்மையை நீக்கலாம்.

---

# சன்மார்க்க போதங்கள்.



(தெல்லிப்பழை-கா. சின்னப்பா.)

---

அல்லும் பகலும் நல்லவை நீபுரி
ஆணவமலத்தை வீணாடக்கார்
இன்னல்புரிதலை எந்நாளுந்தவிர்.
ஈட்டுக்கடனில் மாட்டிக்கொள்ளாதே
உள்ளதையென்றும் விள்ளுதல் நன்று
ஊதாரிக் குணத்தைத் தீதென நீயுண
எல்லாப்பாசமும் பொல்லாதென நினை
ஏசப்பழகி மோசப்படாதே
ஐயமிடுபவர் செய்வது நல்லறம்
ஒற்றுமையுடையோர் நற்பயனுறுவர்
ஓதியுணர்ந்து நாதனடிசேர்
ஔவியமிலாரைச் செய்யவள் சேர்வள்
கற்பிலா மாதரின் பொற்பைப் புகழேல்
காவலில்லாப் பாவையர் கெடுவர்
கிழப்பருவத்தும் உழைப்பைவிடாதே
கீதப்பிரியனெம் நாதனென்ன அறி
குணக்குன்றேறிப் பிணக்கைத் தவிர்நீ
கூற்றன் வருமுன் ஆற்றிடு நல்லறம்
கெட்டவர் தொடர்பை விட்டுவிலகு
கேத்திரகணித சாத்திரம் நீபடி
கைத்தொழில் பலவும் எத்தினமும் செய்
கொடுப்பதை நீ பிறர்க் கெடுத்துரையாதே.
கோழைத்தனத்தைக் கீழோர் பூண்பர்
சற்பாத்திரத்தில் நற்பொருள் சேரும்
சாதுக்களை நீ பாதுகாத்திடு நிதம்
சிவபெருமானைத் தவம்புரிந்தடைநீ
சீதை மாதர்முன் மாதிரிக் கேற்றபெண்
சுத்தபோசனம் பத்தியை வளர்க்கும்
சூரிய வெப்பம் யாருக்குமவசியம்

செய்தவமென்றும் மெய்ப்பொருள் விளக்
சேர்ந்தோர் தமக்கு ஆந் துணை புரிவாய்.
சையெனப் பகர்வதைச் செய்யாதிருநீ
சொந்தப் பொருளிலும் பந்தம் வையாதே
சோதரர்போல மாதரை மதித்திடு
தற்பரன் நற்பதம் பற்றிட விரும்பு
தாய்தந்தையரை வாயால் வாழ்த்து
திருவருள் பிறவிப் பெரும்பிணி நீக்கும்
தீட்சை பெறின்நற் காட்சிகிடைக்கும்
துஞ்சும்வரையும் அஞ்சாதிரு நீ
தூலதேகம் காலத்தழியும்
தென்றற் காற்று என்றும் நன்று
தேட்டம் செய்வதில் நாட்டம் தவிர்நீ
தையலர் மையலில் நையாதிருந்திடு
தொன்மை முறைகள் நன்மை பயக்கும்
தோகையை நம்பி மோகத்தழுந்தேல்
நல்லோர் தரிசனம் நல்லது யார்க்கும்
நாரியர் கற்பைச் சீரியர் பேணுவர்
நிறைந்த மனத்தைத் துறந்தோர் பூண்பர்.
நீரிற் குமிழிபோல் நாரியரழகுபோம்
நுட்ப புத்தி பெட்பு நல்கும்
நூல் நூற்பவரின் சால்பைப் போற்று
நெஞ்சிலென்றும் பஞ்சாட்சரம்பதி
நேர்மையை என்றும் ஆர்வமாய்க் கடைப்பிடி
நையாதிருந்திடிற் தெய்வத்தைநாடு
நொந்த மனத்தினர் சிந்தையைத் தேற்று
நோயை நீக்கி நீயனுதினம்வாழ்
பரஸ்திரி பாசம் தூரத்தும் நற்கதி
பாவத்திற் பாசம் ஆபத்தளிக்கும்
பித்தரின் சேர்க்கையை நித்தமும் நீதவிர்
பீடிலாமாந்த ரோடுசேராதே
புத்தரைப்போலச் சித்தம் திருத்து
பூவையர் கற்பை நாவாற்றுதித்திடு
பெரியோருடன் நீ திரிவது நன்று
பேதமையில்லா மாதரைப் போற்று

பையலோடிணங்கின் நைவது திண்ணம்
பொறுமையைப் பூண்பவர் வறுமையைத் தாங்குவர்
போசனஞ் செய்யுமுன் ஈசனைத் துதித்திடு
மனத்தின் தூய்மை சினத்தை மேற்கொள்ளும்
மானமிழப்பவர் ஈனமடைவர்
மின்னல் நேர்வாழ்வு தன்னை மறந்திடு
மீதூண் விருப்பால் தீதுறுதிருநீ
முப்பாசத்தையும் தப்பாதகற்று
மூவாசை நீக்கிற் பாவாணர் போற்றுவர்
மெல்லி நல்லாளைப் புல்லுதல் மாநலம்
மேகச் சூடு தேகங்கெடுக்கும்
மைவிழியாரைத் தெய்வமெனத்தேர்
மொழிவதனைத்தினும் தெளிவைக் கவனி
மோனசாதனம் ஞானம் நல்கும்
வருத்தும் நோய்கள் துரத்திடுமின்பம்
வாதுமுற் கூறில் தீதுபின் விளையும்
வாங்கிய கடனை நீங்கிட முயற்சிசெய்
விடையேறீசனை இடைவிடாதெண்ணு
வீடடைவதைநீ நாடிடு என்றும்
உத்தம நெறியைப் புத்தியாய்த் தேர்ந்திடு
ஊரவரோடு சேருதல் நன்று
வெளித்தோற்றம்போல் உளத்துமிருநீ
வேதனை விளக்கும் சூதை வெறுத்திடு
வையம்போற்றும் செய்கையை நாடு
ஒருமதத்தோரையும் அருவருக்காதே
ஓயாதீசனை வாயால் வாழ்த்து.
பூவுலகத்தோர் பொலிந்து வாழுகவே.



மாமனார்:—"என் மகள் கேட்டவைகளை வாங்கிக் கொடுக்கிறாயா?"

மருமகன்:—"ஆஹா! கொடுத்துக்கொண்டே இருக்கிறேன். இனி, என்னைத் தவிர வேறொன்றும் தேவையில்லாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது."



வாத்தியார்:—"உன்னிடம் உள்ள எட்டணாவில் மூன்றணா போய்விட்டது என்று வைத்துக்கொள்-மீதி என்ன? சொல் பார்க்கலாம்"

பையன்:—"மூன்றணா ஏன் போகவேணும் சார்?"

# "துறவு"



(வேதாந்தி.)

'துறவு' என்னும் தலைப்பைப் பார்க்கும் பொழுதே, ஏதோ ஒரு வேதாந்தப் பிரசங்கம் என்று நினைத்துவிடாதீர்கள்! யான் எழுதப் புகுந்தது, அகத்துறவைப் பற்றியா புறத்துறவைப் பற்றியா என்று கேளாதீர்கள்! அவ்விரண்டுமின்றி, மூன்றாவதாக ஒருவகைத் துறவும் இந் நாளில் இருந்து வருவதை நான் நிரூபித்துக் காட்டுவேனாயின், எனக்கு என்ன கைம்மாறு செய்வீர்கள்? பட்டங்களுக்குப் பெரு மதிப்பு இருந்த காலம் மலையேறிவிட்டதாதலால், அவற்றால் என்னை மயக்கிவிட முடியாது. கௌரவப் பைத்தியம் இல்லாதவர்களுக்கு, புகழ் மொழிகள் எட்டிக்காய்ச் சட்டினியாகவே இருக்குமல்லவா? அத்தகைய நூதனத் துறவை விளக்கிக் காட்டக்கூடியதொரு கதை சொல்கிறேன்; இது கற்பனையே யாயினும், இதில் கண்டபடி தற்சமயம் நடந்துவரவில்லையென்று எவரேனும் நிரூபித்து விடக் கூடுமாயின், அவர்களுக்கு அரசாங்கத்தில் உயர்ந்த உத்தியோகம் வாங்கிக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன்.

வெங்கபுரி நடுக் கம்பத்தம் நாராயணப் பிள்ளை, திருமாலை யன்றி தெய்வம் வேறு அறியாத திருக்குலத்தில் பிறந்தவர்; செல்வத்தில் சிறந்தவர்; பொருளின் அருமை தெரிந்தவர். பங்காளிகளிடமிருந்து தமக்கு உரிய பங்கைப் பிரித்துக்கொண்டபோது கிடைத்த முப்பது காணி நிலங்களை, பதினைந்து வருஷங்களுக்குள் தமது இடைவிடாத உழைப்பின் பயனாக முந்நூறு காணி நிலங்களாக பெருக்கியவர். தம் வீட்டுப் போரிலுள்ள வைக்கோலை தமது மாடுகளுக்குப் போடவும் மனங் கொள்ளாமல், அயல் வீடுகளிலிருந்து வைக்கோல் வாங்கிப் போட்டு மாடுகளின் உயிர் போய்விடாதபடி காப்பாற்றிவந்தவர். தமது ஊரிலுள்ள வெற்றிலை பாக்குக் கடைக்காரர்கள் தம்மை எதிர்த்து நிற்கமுடியாது என்னும் துணிவால், காலணா வெற்றிலை வேண்டியிருந்தாலும் காசு கொடுக்காமல்—கடைக்காரனையும் கேளாமல் தாராளமாக தாமே எடுத்துக்கொண்டு விடுபவர். அவ்வாறு அவர் காலணா செலவழிக்கவும் மனமின்றி சிக்கனமாக வாழ்ந்து வந்ததனாலல்லவா, பதினைந்து வருஷங்களுக்குள் அரசாங்கத்திற்கு ஆண்டுதோறும் ஐந்நூறு ரூபாய் வருமான வரி செலுத்தக்கூடிய கௌரவம் மிகுந்த இலட்சாதிபதிகளின் பட்டியில் ஒருவராக சேர்த்துக்கொள்ளப்பட்டார்!

அத்தகைய அந்த பிரபு பதினைந்து வருடங்களுக்குப் பின் துறவு கொண்டுவிட்டார் என்றால், நீங்கள் நம்புவீர்களா? நீங்கள் நம்பினாலும் நம்பா விட்டாலும் அவர் துறவியாக மாறியது மட்டும் என்னவோ உண்மைதான். ஆனால், அது எத்தகைய துறவு என்பதை அறிய நீங்கள் பேராவல் கொள்வீர் களல்லவா?

அவர் கொண்ட துறவு, அவரை வேதாந்தப் பிரசங்கியாகவாவது-'காவி அணிந்து திருவோடேந்தித் திரியும் சாமியாராகவாவது—"உலகம் பொய்; இன்பம் பொய்; நாடு பொய்; வீடு பொய்; உற்றார் பொய்; பெற்றார் பொய்; நான் பொய்; நீ பொய்; எல்லாம் பொய்யே"—என்று உலகத்தையே பொய் மயமாகக் கண்டு விரைவில் விண்ணுலகம் சேர ஆர்வங்கொண்டு நிற்கும் ஞானியாராகவாவது மாற்றிவிடவில்லை. அங்ஙனமிருந்தும், குறிப்பிட்ட வேளைகளில் அவரை தம்மை மறக்கச் செய்து அன்னபானாதிகளை வெறுக்கச் செய்து உறவினரிடமிருந்து ஒதுக்கிவைக்கக்கூடியதாக ஒரு துறவு இருந்தால், அது மிக்க அதிசயிக்கத்தக்க துறவேயாகுமல்லவா?

நாராயண பிள்ளை ஒருநாள், இடைவிடாமல் பல வருஷங்கள் உழைத்து வந்த தமது பேருழைப்பின் பயனாகவும், தந்திர சாமர்த்தியங்களினாலும், தினசரி கூலிவேலை செய்து கஞ்சி குடிப்பவர்களைக் காட்டிலும் குறைந்த செலவில் மிக்க சிக்கனமாக வாழ்வு நடத்திவந்ததனாலும் தாம் பெற்றுள்ள மூந்நூறு காணி நிலங்களையும் வரவு செலவில் கிடக்கும் ஏராளமான பணத் தொகையையுங் குறித்து ஆழ்ந்த ஆலோசனையில் ஆழ்ந்தார். எவ்வளவோ கஷ்டப்பட்டு தாம் சம்பாதித்துள்ள ஏராளமான சொத்தை, தமக்குப் பிற் காலம் தமது புதல்வர்கள் நால்வரும் எவ்வழிகளில் அழித்துவிடுவார்களோ என்ற அச்சம் அவரது அகத்தில் தோன்றவே, அவரது மனநிலை மாறத் தொடங்கியது. "வாழ்வாவது மாயம், இது மண்ணாவது திண்ணம்"— என்று இளமையில் அவர் கேட்டிருந்த வாக்கியம் அவரது அகத்தில் தோன் றியது. என்றேனும் ஒருநாள் இவ்வளவு பொருள்களையும் விட்டுவிட்டு இவ் வுலகத்தினின்றும் மறைந்துவிடவே நேரும் என்பது அவர் உள்ளத்தை உறுத்தியது. எனவே, அவர் ஒருவித தீர்மானத்திற்கு வந்தார். எத்தகைய தீர்மானம் என்று நினைக்கின்றீர்கள்? சொத்துகளில் பெரும் பகுதியையும் தானதருமங்களில் செலவழித்துவிடும் தீர்மானத்திற்கா? இல்லை, இல்லை. தாம் நெற்றி வியர்வை நிலத்தில்விழ உழைத்துச் சேர்த்த பெரும் பொருளை, தமது மனத்தில் பட்டபடி யெல்லாம் தாராளமாக செலவழிக்கும் தீர்மானத் திற்கே! அத்தீர்மானத்தால் பயன்பெற்றவர்கள் வயிற்றுக் கஞ்சிக்கும் வழி யின்றி வருந்தித் திரியும் வறிஞர்களும் தேவஸ்தான பரிபாலகர்களுமாக இல்லாதொழிந்தது அவர்களது துரதிருஷ்டமே யன்றி, அத்தீர்மானத்தின் குறையாகுமா?

முதன் முதலில், தமது மனம் காட்டிய வழியில் நடப்பது எப்படி என்று நாராயணப் பிள்ளை யோசித்தார். டாம்பீக வழிகளேனும் கௌரவச் செலவுகளேனும் அவருக்கு சிறிதும் பிடிக்கவில்லை. மேலும், அவற்றில் தலைப் பட்டால், தமது மரணகாலம் வரையில் தாம் சம்பாதித்த செல்வத்தை அனுபவிக்க முடியாது என்று அச்சம் கொண்டார். அதனால், அவர் சிறிது சிறிதாகவே செலவு செய்ய விரும்பினர். எப்பொழுதும் நாராயணப் பிள்ளைக்கு மற்றவர்கள் எதைப் பழிக்கிறார்களோ அதை இரகசியத்திலேனும் அனுபவித்துப் பார்த்துவிடவேண்டும் என்ற ஆசை அதிகம் உண்டு. அவ்வாசையை தமது வாழ்க்கை முழுவதிலும் அவர் மேற்கொண்டு வாழ்ந்துவந்தார். அதன் பயனாக அவர் செய்த திருவிளையாடல்கள் பல. ஆயினும், கள்ளரக்கன் ஒருவன் மட்டும் அவரை ஆட்கொள்ளாதிருந்து வந்தான். அக்குறை கள்ளரக்கனுடையதா? அல்லது நாராயணப் பிள்ளையினுடையதா என்பதை முடிவு கட்டமுடியாது.

இவ்வாறு சில காலம் சென்ற பின், ஒருநாள் நாராயணப் பிள்ளையின் மனத்தில் கள்ளரக்கன் தோன்றலாயினன். "தனவந்தர்களில் பலர், காபிக்கு அடிமைப்பட்டவர்களாக இருக்கவில்லையா? அவர்களைப்போல், நாளொன்றுக்கு மூன்று வேளைகளில் குடிக்காவிட்டாலும் ஒருவேளை கொஞ்சம் மது வருந்திவிடுவதால், உள்ள பெரும் பொருள் மறைந்துபோய்விடாது"—என்று அறிவுறுத்தினன். அந்த யோசனை நாராயணப் பிள்ளையின் மனத்தில் மதுவின் ருசிபார்க்கும் ஆர்வத்தை வளர்த்துவந்தது. சில தினங்கட்குப் பின், ஒருநாள் அவர் ஒரு துலாம் கள்ளை ரகசியமாக ருசி பார்த்தார். அவ்வொரு துலாமும் அவருக்குப் புத்தம் புதிய தேன் போன்றே ருசித்தது. தேனையும் கள்ளையும் 'மது' என்ற பெயரால் வழங்கச் செய்த பெரியோரைப் பெரிதும் கொண்டாடலானார். அன்று முதல் ஒரு மாத காலமளவும் நள்ளிரவில் படுக்கப்போகும்போது எவரும் அறியாமல் தினந்தோறும் ஒரு துலாம் கள்ளைக் கள்ளத்தனமாக சாப்பிட்டுவந்தார். ஒரு மாதத்திற்குப் பின் ஒரு துலாமாக இருந்தது இரண்டு துலாமாக ஏறியது. சில மாதங்கட்குப் பின் இரண்டாக இருந்தது மூன்றாக ஏறியது. அவர் வசிக்கும் ஊரில் கள்ளுக்கடை இல்லாமையால் இரண்டு மைலுக்கு அப்புறம் உள்ள ஊரிலிருந்து நாடோறும் கள் வாங்கிவரச் செய்யவேண்டியிருந்தது பற்றி பெரிதும் வருந்தினர்.

ஒரு நாள், அவரது படுக்கையில் ஒளித்து வைத்திருந்த கள் நிரம்பிய சீசாவை அவரது கடைசி மகன் கண்டுவிட்டான். ஒரு வருடகாலமாக தனது தந்தையின் மனநிலையும் உடல் நிலையும் பெரிதும் மாறுபட்டுவந்திருப்பதன் காரணத்தை கண்டுகொண்டுவிட்ட அவன், அடங்காக் கோபத்துடன் தனது தந்தை யென்றும் பாராமல் நாராயணப் பிள்ளையை பலவாறு திட்டினன். தான் கஷ்டப்பட்டு சம்பாதித்த சொத்தை தன் மனம்போனபடி செலவழிக்க தனக்கு பூரண சுதந்திரம் இருக்கும்போது 'நன்றியறிவின்றி தன் மகன் தன்

னைத் திட்டினானே' என்று ஆத்திரம் மிகுந்தார் நாராயணப் பிள்ளை. அதற்கு மேல் அங்கிருந்தால், தான் பல வழிகளிலும் அவமானப்படவேண்டி வரும் என்று நினைத்தவராய்—தனது ஆசைக்கு இடையூறாக இருந்த தனது பிள்ளைகள் மேலும் மனைவிகள் மேலும் கொண்டிருந்த ஆசையை அறவே விட்டொழித்தவராய்—வீட்டுவாழ்வை வெறுத்தவராய்—கள்ளுக்கடை இருந்த கிராமத்திற்கே சென்று குடியேறிவிட்டார். பார்த்தீர்களா! எவ்வளவு எளிதில் இவர் மனைவி மக்களைத் துறந்து சென்றார் என்பதை!

சொந்த ஊரை விட்டுவிட்டு வேற்றூருக்கு வந்துவிட்டாலும்—செல்வச் சிறப்பின் பயனாக நாராயணப் பிள்ளைக்கு வேண்டிய சௌகர்யங்களில் என்னவோ ஒரு குறையும் இல்லை. ஏவலாட்கள் பலர் அவர் ஏவிய வேலைகளைச் செய்ய காத்து நின்றனர். குடியின் ஆசை அதிகரிக்க அதிகரிக்க, அவருக்கு இராச் சாப்பாடு பிடிக்கவில்லை. எனவே, இரவுகள் தோறும் ஏழு மணிக்கு மேல் ஒரு புட்டி மதுவை உட்கொண்டுவிடுவார்; உடனே, அவரது உடல் மண்ணுலகத்தில் இருப்பினும் மனம் மட்டும் வேறிடம் சென்றுவிடும். பின், அவர் யோகிகளைப் போலும் தம்மை மறந்த நிலையை அடைந்துவிடுவார். யோகிகள் துணி அணிவதை விரும்பாததேபோல், அவரும் இடையில் துணி உடுப்பதை விரும்பாதவரானார். அவருக்கு விருப்பம் இல்லாவிட்டாலும், பரிகாசத்திற்குப் பயப்பட்ட பணியாட்கள் பலாத்காரமாகவாவது அவரது இடுப்பில் துணியை இறுக்கிக் கட்டிவிடுவார்கள். அவ்வாறு அவர் உடையிலும் துறவு கொண்டுவிட்டார்.

இரவு எட்டுமணிக்கு அவரை இருபுறமும் இரண்டு ஆட்கள் பிடித்துக் கொண்டு நடத்திச்சென்று படுக்கைக்குக் கொண்டுபோய் படுக்கவைத்து விடுவார்கள். பின், கள்ளரக்கனும் நித்திராதேவியும் அவரை மெய்மறந்து கிடக்கச் செய்து விடுவார்கள். தூக்கம் தெளிந்து எழுந்தவுடன், பக்கத்தில் வைக்கப்பட்டிருக்கும் தண்ணீரில் கரைத்த சோற்றுக் கஞ்சியை கண்களை மூடிக் கொண்டு குடித்துவிட்டு பழையபடியே படுத்துக்கொண்டு விடுவார். அவ்வாறு வாழ்ந்து வந்த அவர், மாலைதோறும் மது மயக்கமும் மதி மயக்கமும் உடையவராக இருந்து வந்தார்.

அதன் பயனாக—தந்திர சாமர்த்திய வஞ்சக வினைகளில் தேர்ந்திருந்த காலத்தில் அவரால் பெரிதும் துன்புறுத்தப் பட்டவர்களெல்லாம், கள்ளரக்கனுக்கு அடிமைப்பட்ட காலத்தில் அவரை அடுத்து பல வழிகளிலும் அவரை ஏமாற்றி ஏராளமான இலாபம் அடைந்துவரலாயினர். இவ்வண்ணம் கள்ளாசை யொன்றின் பயனாக—பொருளாசை, மனைவி மக்கள் ஆசை, வீட்டாசை, உடையாசை, உணவாசை, புகழாசை முதலிய ஆசைகள் பலவற்றையும் துறந்தவராக விளங்கலானார் நாராயணப் பிள்ளை.

இத்தகைய துறவிகளான கள்ளரக்கனின் தொண்டர்கள் குறையும் காலம் எப்பொழுதோ, அப்பொழுதே தமிழ்த்தாயின் ஆற்றொணாத் துயரம் மறையக் கூடும்.

---

# விசித்திர விநோதம்

### "அமாவாசை"

பட்டணத்தார்:—"சாஸ்திரிகளே! அமாவாசை என்றைக்கு?"

சாஸ்திரிகள் (செவிடு):—"நான் அயலூர். பட்டணத்துச் சமாச்சாரம் ஒன்றும் என்னைக் கேட்காதீர்கள்."

***

டாக்டர்:—"தங்கள் மனைவிக்கு நோய் எதுவும் இல்லை. ஆனால் தனக்கு ஏதோ நோய் இருப்பதாகக் கூறுகிறாள். ஆகையால் ஏதோ பேருக்குக் கொஞ்சம் மருந்து கொடுக்கிறேன் - கொண்டுபோய்க் கொடுங்கள்."

பெரிய மனிதர்:—"உங்களுக்கு மருந்துக் கிரயமும் பேர் அளவில் கொடுக்கிறேன்.



***



### "நல்ல பதில்"

நாட்டுப்புறத்தான்:—"தாங்கள், நம்ப ஊரைவிட்டுப் போனபின் எவ்விடத்தில் வேலை பார்த்து வருகிறீர்கள்?"

உபாத்தியாயர்:—"பட்டணத்திலுள்ள ஒரு காலேஜில்."

நாட்டுப்புறத்தான்:—"உயிர் காலேஜிலா? அல்லது செத்த காலேஜிலா?"



"ருஜு"

வஞ்சகமற்ற மஸ்தான் சாய்பு:—"தங்களை சந்தித்தது எனக்கு அதிக சந்தோஷம். தங்களைப்பற்றி எவ்வளவோ கேள்விப்பட்டிருக்கிறேன்."

குற்றமுள்ள நெஞ்சுடையவர்:—"என்ன ஓய் கேள்விப்பட்டீர்? நீர் அவைகளில் ஒன்றையாகிலும் ரூபிக்க முடியுமா!"

***

முதல் வஸ்தாது:—"குஸ்தி போடுவது ரொம்ப நல்லதுதான். ஆனால் தகுந்த ஜோடி கிடைப்பதுதான் கஷ்டமாயிருக்கிறது."

2-வது வஸ்தாது:—"நம்மைக்காட்டிலும் சிறிய ஜோடி கிடைப்பது மிகவும் கஷ்டந்தான்.',

***

"சில்லரை"



தர்மசீலர்:—"நான் உனக்கு 3 தம்பிடி கொடுக்கலாமென்று நினைக்கிறேன். உன்னிடம் பத்து ரூபாய் நோட்டுக்கு சில்லரை யிருக்கிறதா?"

***

குப்பன்:—"நான் உன்னிடம் சொன்ன விஷயம் பரம ரகஸியமானது."

சுப்பன்:—"இதுவரை இதைப்பற்றிச் சொன்னவர்கள் எல்லாரும் இப்படியேதான் சொன்னார்கள்."

***

ஒருவன்:—"நமது சுப்பன் குதிரை வண்டிக்கு அடியில் மாட்டிக்கொண்டான்."

மற்றவன்:—"என்னடா தரித்திரம்—மிகவும் அநாகரீகமா யிருக்கிறதே—இன்னுமா இந்த ஊரில் குதிரைவண்டி? எங்கள் ஊரில் மோட்டார்கார்களைத் தவிர வேறு எந்த வண்டியும் காண முடியாது"



நாற்காலியில் சாய்ந்து தூங்கிக் கொண்டிருந்த உபாத்தியாயர் திடீரென எழுந்தார். பார்த்துத் திகைத்தார். பெஞ்சுகளெல்லாம் காலியா யிருந்தன. மேஜையின் மேலிருந்த ஒரு கடிதத்தைக் கண்டு அதை எடுத்துப் படித்தார். அதில் எழுதி யிருந்ததாவது:—

ஐயா !

பள்ளிக்கூடம் முடிந்து நாங்கள் வீட்டிற்குப் போகிறோம்.

மேஜையின்மேல் நாங்கள் வைத்திருக்கும் மெத்தையை விரித்து தலையணைகளையும் வைத்துச் சௌகரியமாக நித்திரை செய்துவிட்டு வாருங்கள்.

இப்படிக்கு,
தங்களன்புள்ள மாணவர்.

***

ஒருவன்:—"இந்தக் கடையில் வேஷ்டிகள் உண்டா?"

கடைக்காரர்:—"ஆஹா! சாய வேஷ்டி வேணுமா? வெள்ளை வேஷ்டி வேணுமா?"

"ஏதாகிலும் சரி—குருடனுக்கு வேணும்"

***

டிக்கட் பரிசோதகர்:—"இது மதராஸுக்குப் போகும் வண்டி. டிக்கட்டில் திருச்சிக்கு என்றிருக்கிறதே"

பிரயாணி :—" அப்படியா? இந்தச் சங்கதி இஞ்சின் ட்ரைவருக்குத் தெரியுமா?"

***

எஜமான்:—"இந்தப் படத்தை இரண்டாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கினேன். அதை ஜாக்கிரதையாய்க் காப்பாற்றிவரவேணும்,"

வேலைக்காரன்:—"எதற்காக இவ்வளவு விலை கொடுத்து வாங்கினீர்கள்? நான் ரூபாய்க்கு நாலு படம் வாங்கினேனே."

***

பையன்:—"அப்பா! உன்னை எப்பொழுதோ பள்ளிக்கூடத்தை விட்டுத் துரத்திவிட்டார்கள் என்று சொன்னாயே அந்தக் கதை ஞாபகம் இருக்கிறதா?"

தந்தை:—"ஞாபகம் இருக்கிறது. அதெல்லாம் பழைய கதை."

பையன்:—"எனக்கும் இப்போது அப்படியே நடந்துவிட்டது."

"பத்தியம்"



நான் போன வருஷம் தங்களிடம் வந்து நோய்க்கு மருந்து சாப்பிட்டுக் குணமான பின், நான் கூடியமட்டும் ஈரத்தை விலக்கி வைத்திருக்க வேண்டுமென்று தாங்கள் சொல்லியிருந்தீர்கள். இப்பொழுது வெந்நீரிலாவது ஸ்நானம் செய்யலாமா வென்றுதான் தங்களிடம் கேட்டுக்கொண்டு போக வந்தேன்.

***

ஒருவன்:—"ஜெயித்த குதிரையைப்பற்றி ஒரு தந்தியை அனுப்பினேன். தாங்கள் அதை உடனே அனுப்பிவிட்டீர்களா?"

டெலிகிராப் மாஸ்டர்:—"அனுப்பிவிட்டேன். ஆனால் தாங்கள் ஒரு அணாவைக் குறைவாக அனுப்பினீர்கள். அதனால் குதிரையின் பேரை அனுப்பவில்லை."

***

ராமன்:—"இந்தமாதிரி இனிமேல் பேசாதே. உன் மண்டையைப் பிளந்து விடுவேன்."

சோமன்:—"இதோ பேசுகிறேன் என்று வைத்துக்கொள்."

ராமன்:—"இதொ பிளந்து விட்டேன் என்று வைத்துக்கொள்."

***

நண்பன்:—"உன் பாட்டுக்களைப் பல பேர் படித்தார்களா ?"

கவி:—"ஆம்! பல பேர் படித்தார்கள். அநேக பத்திரிகாசிரியர்களுங்கூட அவைகளைப் படித்துப் பார்த்துவிட்டு எனக்கே திருப்பி அனுப்பிவிட்டார்கள்."

***

வாத்தியார்:—"கொக்குக்கு நீண்ட கழுத்து இருப்பான் ஏன்?"

பையன்:—"பெரிய அலை கிளம்பினால் மூழ்கிப் போகாமலிருக்க."

***

மனைவி:—(அழுதுகொண்டே) "என்னிடம் சொன்ன வார்த்தையை நீங்கள் காப்பாற்றவில்லை அல்லவா?"

புருஷன்:—"அழாதே! இன்னொரு வாக்குறுதி கொடுக்கிறேன்."

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## அதிகாரிகளின் குறுகிய நோக்கம்

காந்தி யடிகளின் உண்ணா விரதத்தை யொட்டி எரவாடாச் சிறையில் பலவிதமான சௌகரியங்களைச் செய்து கொடுத்திருந்த அதிகாரிகள் திடும் பிரவேசமாக அவைகளை யெல்லாம் நிறுத்திவிட்டார்கள். இந்திய அரசாங் கத்தின் கட்டளைப்படியே பம்பாய் அரசாங்கம் இவ்வாறு செய்ததாம். சர்க் காருக்கும் காங்கிரஸ் தலைவர்கட்கும் இடையில் சமரஸ தூரந்தார்களாய் விளங் கிய சாப்ரு—ஜெயகர் முதலியோரும் சர்க்கார் செயலைக் கண்டித்திருக்கின்ற னர். சர். சாப்ரு இதுபற்றி லண்டனுக்கு நீண்ட தந்தி அனுப்பினார். "தீண் டாதார்" விஷயத்தில் சமரஸம் ஏற்பட்ட நன்னிலைமையைச் சாதகமாகக் கொண்டு மீண்டும் காங்கிரஸுக்கும் சர்க்காருக்கும் சமாதானம்செய்துவிடலாம் என்று ஜயகர் முயன்றார். இது அதிகாரிகட்குப் பிடிக்கவில்லை போலும்!

***

## தீண்டாமை போக்க போபால் நன்கொடை

தாழ்த்தப்பட்ட மக்கட்குத் தனித் தொகுதி முறை கூடாது அது நீக் கப்படும் வரை பட்டினிகிடப்பேன் என்று காந்தியடிகள் வஞ்சினம் கூறி வெற்றிபெற்றது முதல் அச்சமூகப் பரச்சினை பெரிதும் நாட்டு மக் களின் கவனத்தை ஈர்த்து நிற்கிறது. தீண்டாமை ஒழியவேண்டும் என்ற பேரொலி நாடெங்கும் கேட்கிறது. பண்டித மாளவியாவின் தலைமையில் பம்பாயில் ஏற்பட்டுள்ள தீண்டாமை விலக்கு நிதிக்குப் போபால் நவாப் அவர் கள் ஐயாயிரம் ரூபாய் நன்கொடை அளித்த செய்தி மகிழ்ச்சிக்குரியதாகும். வேறு பல செல்வர்களும் ஆயிரக்கணக்கில் பொருள் உதவி செய்துவருகி றார்கள். போபால் நவாப் வாழ்க!

***

## தமிழ் மக்களே உங்கள் கடமை என்ன?

தமிழர் வாய்வீச்சுக்காரர்—காரியத்தில் ஒன்றும் செய்யமாட்டார்கள் என்று வடநாட்டார் நம்மைப் பரிகாசம் செய்வது வழக்கம். ஆனால் உண் மையும் அதுவேயாகும். வடநாட்டில் தாழ்த்தப்பட்ட மக்கட்குப் பல கோவில் கள் திறந்துவிடப்பட்டிருக்கின்றன. தென்னாட்டு மக்கள் முன்னும் பின்னும் விழித்துக்கொண்டிருக்கின்றனர். ஸ்ரீமான். சி. ராஜகோபாலாச்சாரியாரும் ஸ்ரீ. ராஜேந்திரப் பிரசாத் அவர்களும் மதுரையிலும் ஸ்ரீரங்கத்திலும் கோவில் அதிகாரிகளைக் கண்டு பேசினர். பயன் விளையவில்லை. ஸ்ரீ. பண்டித மாள வியா போன்றவர்கள் தாழ்த்தப்பட்ட மக்கட்கு ஆலயப்பிரவேச உரிமை அளிக்க முனைந்து நிற்பதால் நமது தென்னாட்டு வைதிகர்கள் அவர் வழியைப் பின்பற்ற வேண்டியதே தருமமாகும். இச்சந்தர்ப்பத்தில் தங்கள் மதங்களில் தீண்டாமை இல்லை என்று தத்துவம் பேசும் சைவ—வைணவ—அத்துவைத சமயத் தலைவர்கள்—மடாதிபதிகள் எல்லோரும் "தீண்டாதார்" ஆலயப் பிரவேசத்திற்கு ஆக்கம் அளிக்க முன்வர வேண்டும். இவர்கள் முன்வர விரும்பாவிட்டால் தமிழ் மக்கள் கிளர்ச்சி செய்து அவர்களை முன்வரச் செய்ய வேண்டும் என்று விரும்புகின்றோம்.

## யாகக் கொலை

இம்மாதம் 2-ம் தேதியில் தஞ்சை சக்கநாயகர் தெருவிலுள்ள தட்டி மாலில் வைதிக பிராமணர்கள் ஒன்று சேர்ந்து ஒரு அஜ (ஆடு) யாகம் நடத்தினார்கள் என்றும், தண்டாங்கோரை ஸ்ரீ அப்பாத்துரை தீக்ஷதர் இன்னும் பலருடன் சேர்ந்து நடத்தினர் என்றும் பத்திரிகைச் செய்திகள் கூறுகின்றன. வெள்ளாட்டைக் கொன்று பக்குவப்படுத்தி அதை வைதிக பிராமணர் உண்டனராம். சபாஷ்! புலால் உண்போரைப் புலையர் என்று ஒதுக்கித் தள்ளும் அப்பிராமணர்களின் யோக்கியதை என்ன என்று கேட்கிறோம். "அவிசொரிந்தாயிரம் வேட்டலின் ஒன்றன், உயிர் செகுத் துண்ணாமை நன்று" என்பது "சூத்திரன்" வாக்கு என்று தள்ளிவிட்டனர் போலும்!

***

## பதவிவேட்கை அலங்கோலம்

இம்மாதம் 8-ம் தேதியில் தஞ்சையில் 12-வது பிராமணரல்லார் மகாநாடு நடத்த ஏற்பாடு செய்யப்பட்டது. இம்மகாநாட்டின் முக்கிய நோக்கம் கக்ஷித் தலைவர் தேர்தல். அது பலிக்கவில்லை. பொப்பிலி ராஜா, மந்திரி கனம் பி. டி. ராஜன், முதன் மந்திரி கனம். முனிசாமி நாயுடு முதலியவர்களின் பெயர்கள் அடிபட்டன. ஆந்திர நாட்டிலிருந்துவந்த பிரதிநிதிகட்கு மகாநாட்டில் கலந்துகொள்ள டிக்கட்டுகளை வழங்க வரவேற்புக் கமிட்டியார் மறுத்தமையால் மிகுந்த குழப்பம் ஏற்பட்டது. குறிப்பிட்ட மகாநாட்டை நடத்த முடியாமல் நிறுத்திவிட நேர்ந்தது. இம்மகாநாட்டில் எழுந்த கருத்து வேற்றுமை கண்ணியமானதல்ல—பதவி வேட்கை குறித்தது. அதனால் மகாநாடு அலங்கோலமாயிற்று. இனிமேல் என்ன நடக்கும் என்று பார்ப்போம்.

***

## பத்திரிகைச் சட்ட ஆயுள் வளர்ச்சி

அக்டோபர் 8-ம் தேதியிலிருந்து பத்திரிகைச் சட்டத்திற்கு மீண்டும் ஓராண்டு ஆயுள் வளர்ச்சி செய்யப்பட்டிருப்பதாக அறிக்கை வெளியாயிருக்கிறது. ஒரு பக்கம் அவசரச்சட்ட மசோதா சாசுவதச் சட்டமாக்கும் முயற்சி தீவிரமாக நடைபெற்றுக்கொண்டிருக்கையில் வைசிராய் பத்திரிகைச் சட்டத்திற்கு ஓராண்டு ஆயுள் வளர்ச்சி அநுக்கிரகம் செய்திருப்பதின் நுட்பம் என்ன என்று விளங்கவில்லை. ஒருகால் இந்திய சட்டசபை அவசரச்சட்ட மசோதாவில் கண்டுள்ள பத்திரிகைச் சுதந்தரத்தடை விதிகளை நிராகரித்துவிடும் என்ற அச்சம் வைசிராய்க்கு இருக்குமோ என்னவோ தெரியவில்லை. காரணம் எதுவாயினும் பொறுப்புள்ள பத்திரிகைகட்கு இச்சட்டம் விலங்காக விளங்குகிறது என்பதில் சிறிதும் ஐயமில்லை. புதிய அரசியல் முறை அமலுக்குவரும் போது பத்திரிகைகள் சுயேச்சையான அபிப்பிராயம் வெளியிட வேண்டிய அவசியம் ஏற்படும். அத்தகைய நிலைமையில் பத்திரிகைகட்கு வாய்ப்பூட்டுப் போடுவதின் பயன் எதுவாயிருக்கும் என்று நாம் விரிக்கவேண்டியதில்லை. புதிய அரசியல் அமைப்பைப் பொருளற்றதாக்க விரும்பினால் பத்திரிகைச் சட்ட ஆயுள் வளர்ச்சியைவிட அநுகூல சாதனம் வேறொன்றுமில்லை என்பதே நமது கருத்து.




# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(239-ம் பக்கத் தொடர்ச்சி.)

கப்பற்றலைவன்:—இரவு இரண்டு மணிக்கு ஒரு தனிவண்டியில் இவர் கொண்டுவரப்பட்டார் என்று என் மனிதர்கள் சொல்லுகிறார்கள். இவரை இரண்டு மனிதர்கள் கப்பலில் ஏற்றினதாகவும், துறைமுகத்தில் போலீஸார் பிரக்ஞையில்லாத மனிதரை உள்ளே கொண்டுபோகக்கூடாதென்று தடுத்ததாகவும் அவர்கள் இம்மனிதர் குடித்திருக்கிறாரென்றும் சில நேரத்திற்கெல்லாம் பிரக்ஞையடைந்துவிடுவாரென்றும் சொன்னதாகவும் இதை நம்பிப் போலீஸார் வழிவிட்டதாகவும் என் மனிதர்கள் எனக்குக் கூறினார்கள்.

இன்ஸ்பெக்டர்:—உன் எஜமானரிடமிருந்து வந்த கடிதத்தைப் பார்த்தவுடனே நீ என்ன செய்தாய்?

கப்பற்றலைவன்:—ஏன்? உத்தரவுப்படி இவரை ஒரு அறையில் போட்டுப் பூட்டிவிட்டேன்.

இன்ஸ்பெக்டர்:—இப்பொழுது கப்பல் இங்கிருந்து எங்கு போகவேண்டும்?

கப்பற்றலைவன்:—இங்கிருந்து பம்பாய்க்குப் போகவேண்டும்.

இன்ஸ்பெக்டர்:—அப்புறம் ?

கப்பற்றலைவன்:—அப்புறம் ஆப்பிரிக்காவுக்குப் போகவேண்டும்.

இன்ஸ்பெக்டர்:—எப்பொழுது மீண்டும் சென்னைக்குத் திரும்புவது ?

கப்பற்றலைவன்:—குறைந்தது ஆறுவாரங்களாகும்.

இன்ஸ்பெக்டர்:—ஆகவே சுமார் நாற்பது நாட்களுக்கு இம்மனிதர் சென்னையி லிருக்கலாகாதென்பது உனது அதிகாரியின் எண்ணமென்பது நன்றாய்த் தெரிகிறது. இந்த விஷயத்தில் ஏதோ ஒரு மர்மம் இருக்கிறது. மேலும் இம்மனிதர் சில அதிசயமான விஷயங்களை என்னிடம் சொல்லுகின்றார். ஆகவே இவ்விஷயத்தில் விசாரணை செய்ய வேண்டியது அத்யாவசியமா யிருக்கிறது.

கப்பற்றலைவன்:—நல்லது; என்பேரில் யாதொரு தப்பிதமுமில்லை யல்லவா ? இதுதான் எனக்கு வேண்டியது. எனக்கு வந்த உத்தரவின்படியே

நான் சகலமும் செய்துகொண்டு வந்தேன். என்னிஷ்டப்படி நான் எந்தக் காரியமும் செய்யவில்லை—என்று சொல்லிவிட்டுப் பிறகு என்னை நோக்கி "ஐயா! அப்படி ஏதாவது நான் தங்களுக்குத் தப்பிதமாக நடந்து கொண்டிருந்தால் தயவுசெய்து என்னை மன்னிக்கவேண்டும்" என்று மிகவும் சாந்தமாகக் கூறினன்.

உடனே இன்ஸ்பெக்டர் அவனைப்பார்த்து "அதெல்லாம் சரிதான்; எல்லாக் காரியமும் நடந்தாய் விட்டது. இம்மனிதர் படவேண்டிய கஷ்டத்தைப் பட்டுவிட்டார். இனி நீ மன்னிப்பு கேட்டாலும் கேட்காவிட்டாலும் அவருக்கு அக்கரையில்லை. பிரக்ஞையில்லாத மனிதரை எந்தக் காரணங் கொண்டும் நீ கப்பலில் ஏற்றிக்கொள்ளக்கூடா தாகையால் உன் மீது தப்பிதமே யில்லையென்று எப்படிச் சொல்ல முடியும்?" என்றார். இதற்கு கப்பற்றலைவன் "நீங்கள் சொல்லுவது உண்மைதான். ஆனாலும் என்னுடைய அதிகாரியின் சொல்லுக்கு விரோதமாக நான் எப்படிச் செய்ய முடியும்?"

இதுகாறும் நான் மௌனமாகவே அவர்களது சம்பாஷணையைக் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்தேன். கடைசியாக எனக்கு ஒரு சந்தேகம் ஏற்பட்டது. உடனே நான் கப்பற்தலைவனைப் பார்த்து "இந்த கடிதத்தை உன்னிடங் கொடுத்தது யார்?" என்று கேட்டேன். இதற்கு அவன் "உங்களைக் கப்பலில் ஏற்றின இரண்டு மனிதர்கள்தான் இக்கடிதத்தை என்னிடங் கொடுத்து விடும்படியாக என்னுடைய ஆட்களிடம் கொடுத்துவிட்டுப் போனர்கள்" என்றான். உடனே நான் "அவர்கள் எவ்வித மிருப்பார்கள்? நிறம், உடை யிவைகளைப்பற்றி உன்னுடைய ஆட்கள் உன்னிடம் சொல்லி யிருப்பார்களே?" என்று கேட்க அவன் "அந்த இரண்டு மனிதர்களும் நல்ல உடைகள் அணிந்துகொண்டிருந்தார்களென்றும் இருவருக்கும் சுமார் 45-வயதுக்கு ஏறக்குறைய இருக்கலாமென்றும் என்னுடைய ஆட்கள் கூறினர்கள்" என்று விடை பகர்ந்தான்.

என்னுடைய சந்தேகம் நிவர்த்தியாகி விட்டது. அந்த இரண்டு மனிதர்களும் பூர்ணலிங்க முதலியாரும் அவர் நண்பன் சபாபதி முதலியாருமாகத்தா னிருக்கவேண்டும். அவர்கள் எனக்கு விரோதமாக வெகு தந்திரமாகவும் புத்திக்கெட்டாத் தன்மையாகவும் தமது எண்ணத்தைப் பூர்த்தி செய்துகொண்டு வருகிறார்களென்று என் மனதிற்குத் தோன்றிற்று.

இன்ஸ்பெக்டர் கப்பற்றலைவனைப் பார்த்து "அவர்கள் இவரைக் கப்பலிலேற்றிவிட்டு உனது எஜமானரது கடிதத்தையும் கொடுத்து விட்டுச் சென்றனரோ?" என்று கேட்க, அவன் "ஆம்; கடிதத்தை எனது ஆட்களிடம் கொடுத்துவிட்டு அவர்கள் வந்த வண்டியிலேயே ஏறித் திரும்பிப்போய்விட்டார்கள்" என்றான்.

இன்ஸ்பெக்டர்:—நல்லது; இவ்விஷயத்தில் அடுத்தாற்போல் நடக்கவேண்டியது எப்படி யென்றால், டாக்டரவர்களே! நீங்கள் இந்தக் கடிதத்தை யெடுத்துக்கொண்டு சென்னைக்குப்போய் சேஷாசலஞ் செட்டியவர்களை நேரிலேயே கண்டு பேசுங்கள். அவர்கள் என்ன பதில் சொல்லுகிறார்களென்று எனக்கும் தயவு செய்து தெரிவியுங்கள்—என்றார். இதற்குள் கப்பற்றலைவன் "அப்படியல்ல; நான் இந்த கடிதத்தைக் கொடுக்க முடியாது. இது எனக்கே எழுதப்பட் டிருக்கிறபடியால் இக்கடிதம் என்னிடமேதா னிருக்கவேண்டும். கடிதத்தைக் கண்டிப்பாய்க் கொடுக்க முடியாது" என்று கூற

இன்ஸ்பெக்டர் சிரித்துக்கொண்டே அவனைப்பார்த்து "கடிதத்தை நீ எனக்குக் கொடுக்கும்படியாகவா நான் வைத்துக்கொண்டிருக்கிறேன்! இப்பொழுது கடிதம் யார் கையிலிருக்கிறது, பார்த்தாயா? இந்தக் கடிதத்தை நான் உனக்குக் கொடுக்க முடியாது! ஏனென்றால் இந்த டாக்டர் சம்பந்தமாக இக்கடிதம் முக்கியமாக வேண்டியதாயிருக்கிறது. மேலும் ஒரு கொலை விஷயத்திற்கு இக்கடிதம் எவ்விதத்திலாவது ஆதாரமா யிருக்கக்கூடும்" என்று சொல்லிக்கொண்டே கடிதத்தை என்னிடங் கொடுத்துவிட்டு என்னைப்பார்த்து "டாக்டரவர்களே! இன்று மாலை இங்கிருந்து தூத்துக்குடிக்குக் கப்பல் போகிறது. பிறகு தூத்துக்குடியிலிருந்து சென்னைக்கு ரயில் மார்க்கமாய் ஒரே நாள் பிரயாணந்தான். ஆகவே இன்றே நீங்கள் சென்னைக்குப் புறப்படுங்கள். நேராக சேஷாசலஞ் செட்டி யவர்களைப்போய்ப் பார்த்துப் பேசுங்கள். நீங்கள் கொஞ்சங்கூட தாமதம் செய்யக்கூடாது. இவ் விஷயம் நிரம்பவும் பயங்கரமாயிருக்கிறது. இதை சரியானபடி விசாரிக்காமல் விட்டுவிடுவது இன்னு முங்களுக்கு அதிகமான ஆபத்தையே உண்டு பண்ணும்" என்றார். உடனே நான் "என்னைச்சுற்றி யெங்கும் ஆபத்துகளாகவே யிருக்கின்றன. என்னை அடியோடு தொலைத்துவிட வேண்டுமென்று சிலர் வேலை செய்துகொண்கி வருகிறார்களென்று எனக்கு நிச்சயமாய்த் தெரிகிறது—இதற்கெல்லாம் காரணம், என் மனைவி மீனுளின் கொலையை மறைத்துவிட வேண்டுமென்பதே" என்றேன். பிறகு சட்டென்று ஏதோ ஒரு எண்ணங்கொண்டவராய் இன்ஸ்பெக்டர் என்னை நோக்கி "அப்படியானல் நாம் ஏன் சென்னையிலிருக்கும் துப்பறியும் சீனிவாசன் அவர்களுக்கு தந்தி கொடுக்கக்கூடாது? நீங்கள் சென்னை போய்ச் சேரும் வரையில் அவர்கள் அந்த மர்ம வீட்டைக் காவல் போடுவார்கள். அங்கு நடப்பவைகளைத் தந்திரமாய்க் கவனித்துக்கொண்டு வருவார்கள். துப்பறியும் சீனிவாசனது சாமார்த்தியத்தைப்பற்றி நான் அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றார்.

இதுவும் ஒரு தந்திரமான வழியே! இன்ஸ்பெக்டரது சமயோசித யுக்தியை நினைத்து நான் சந்தோஷ மடைந்தேன். "நீங்கள் சொல்லியபடியே செய்வோம். இப்பொழுதே தந்தி கொடுத்து விடலாம்" என்று அவசரமாகக் கூறினேன். ஆனல், அந்தோ! அடுத்த நிமிஷம் அக்கொடிய உண்மை மின்னல்போல் என் மனதிற்றோன்றியது. அவமானத்தினல் என் தேகம் முழுதும் குன்றிப்போய் விட்டது............நான் இன்ஸ்பெக்டரைப் பார்த்து "உங்கள் யோசனை நல்ல யோசனைதான்! ஆனல் அந்த மர்ம வீடு சென்னையில் எங்கிருக்கிற தென்றுதான் எனக்குத் தெரியாது!! அதன் விலாசத்தைக் கவனித்துக்கொள்ள எனக்குத் தோன்றவில்லை. பிரக்ஞையற்று அந்த வீட்டிற்குள்ளேயே விழுந்த நான் அப்பால் நடுசமுத்திரத்தில்தானே கண் திறந்தேன்" என்றேன். இதைக்கேட்டு இன்ஸ்பெக்டரும் மிக்க வருத்த மடைந்தார், "அடடா! என்ன துரதிர்ஷ்டம்! சென்னை நகரத்தில் ஒரு வீட்டைப் போலவே பல வீடுகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. உங்களை அவ்வீட்டிற்கு அழைத்துச் சென்ற வேலைக்காரி உங்களிடம் அவ்வீட்டின் விலாசத்தைக் கூறி யிருப்பாளே?" என்று இன்ஸ்பெக்டர் என்னைப் பார்த்துச் சொல்ல நான் மிக்க மனவருத்தத்துடன் "இல்லை; அவள் ரிக்ஷாக்காரனுக்குத்தான் விலாசத்தைக் கூறினள். நான் அதைக் குறிப்பாய்க் கவனித்துக் கொள்ள வில்லை. அந்த வேளையிலெல்லாம் எனக்குக் கிஞ்சித்தாவது சந்தேகம் இருந்தால்தானே நான் எதையும் குறிப்பாய்க் கவனித்துக்கொள்ள ஏது விருக்

கும்?'' என்றேன். உடனே இன்ஸ்பெக்டர் ''அப்படியானால் அவ்வீடு இன்ன தெருவிலிருக்கிறது என்றுகூட உங்களுக்குத் தெரியாதா?'' என்று கேட்க நான் ''தெரியாதே'' என்று விசனத்துடன் பதிலளித்தேன்.

ஆனால் அடுத்த நிமிஷம் எனக்கு ஒரு புதிய எண்ணம் தோன்றியது. உடனே நான் இன்ஸ்பெக்டரை நோக்கி ''கலியாணம் நடந்த ஸ்ரீகந்தஸ்வாமி கோவிலில் விசாரித்தால் அவ்வீட்டின் விலாசம் கிடைக்கலாம்!'' என்றேன். இதைக்கேட்டதும் இன்ஸ்பெக்டரின் முகம் சற்று மலர்ந்தது. ''நீங்கள் கூறுவது ஒரு நல்ல வழிதான். அந்தக் கோவிலில் விசாரித்து அவ்விலாசத்தை அறிந்து கொள்ளலாம்'' என்று சந்தோஷத்துடன் அவர் என்னிடங் கூறினர்.



## 4—அத்தியாயம்

### இறந்தவள் பிழைத்த அதிசயம்

மூன்றும் நாட்காலை நான் இன்ஸ்பெக்டர் சொன்னதுபோல் சென்னைபட்டினம் மீண்டும் போய்ச் சேர்ந்தேன். கோடீச்வர சேஷாசலஞ் செட்டியின் மாளிகையை அடைந்து அவருடன் சற்று பேசவேண்டு மென்பதாக மாளிகை வாசலிலிருந்த வேலைக்காரனுக்குத் தெரிவித்து என் பெயருள்ள கடிதத்துண்டை அவனிடங் கொடுத்தேன். சுமார் பத்து நிமிஷங்களுக்கெல்லாம் என்னைத் தன் எஜமானர் உள்ளே கூப்பிடுவதாக அவ்வேலைக்காரன் எனக்குத் தெரிவித்தான்.

நான் சேஷாசலஞ் செட்டியைக் கண்டதும் அவருக்கு வந்தனமளித்து அவர் அளித்த ஆசனத்திலமர்ந்தேன். பிறகு சென்னையிலிருந்து நான் அவர்களால் கப்பலேற்றப்பட்டதன் காரணத்தைக் கேட்டேன். இதைக்கேட்டதும் உண்மையில் நான் சரியான ஸ்வாதீனத்துடனில்லை யென்றே அவர் எண்ணிவிட்டார்.

சேஷாசலஞ்செட்டி:—நீங்கள் கூறும் சமாச்சாரத்தைப்பற்றி எனக்குக் கொஞ்சங்கூடத் தெரியாது. நீங்கள் அமராவதி கப்பலில் சென்றது உண்மைதானா?—என்று தாங்க முடியாத ஆச்சரியத்துடன் கேட்டார்.

கொளும்பில் போலீஸ் இன்ஸ்பெக்டர் கப்பற்றலைவனை விசாரித்தது முழுதையும் நான் இவரிடங் கூறினேன். பிறகு ''உங்கள் கையெழுத்துள்ள கடிதம் இதோ இருக்கிறது'' என்று சொல்லி நான் கொண்டு வந்த கடிதத்தை அவரிடங்கொடுத்தேன். அவர் கடிதத்தை மிக கவனமாய்ப் பார்த்துவிட்டுப் பிறகு கீழேயுள்ள கையெழுத்தையே உற்றுப் பார்த்தார்.

உடனே சேஷாசலஞ் செட்டி என்னைப்பார்த்து ''இவ்விஷயம் நிரம்ப ஆச்சரியமாகவும் மர்மமாகவும் இருக்கிறது. இதெல்லாம் யாருடைய வேலையோ தெரியவில்லை. இக்கடிதம் என் பெயரால் உள்ள கம்பெனியைச்சேர்ந்த கடிதமானாலும் கையெழுத்து என்னுடையதில்லை. யாரோ பொய் கையொப்மிட்டிருக்கிறார்கள்.'' என்றார்.

''அப்படியானால் இது உங்களுடைய கையெழுத்தில்லையா?'' என்று நான் அடக்க முடியாத ஆச்சரியத்துடன் கேட்டேன்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

## ஆங்கீரஸ௵ ஐப்பசி௴—கலியுகாதி 5034, சாலிவாகனம் 1855,
## பசலி 1342, கோல்லமாண்டு 1108, ஹிஜரி 1351,
## இங்கிலீஷ் 1932௵ அக்டோபர்௴ — நவம்பர்௴

| ஐப்பசி௴ | அக்டோபர் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 17 | திங் | திரி50-5 | கி✱60 | மர60 | [மாச விரதம்<br>கிருத்திகை, சந்திரோதய |
| 2 | 18 | செ | சது56-8 | கிரு2-45 | சித்2-45அ | |
| 3 | 19 | புதன் | பஞ்60 | ரோ10-5 | சித்60 | |
| 4 | 20 | வியா | பஞ்1-53 | மிரு16-50 | மர60 | |
| 5 | 21 | வெ | சஷ்6-45 | திரு22-38 | சித்60 | |
| 6 | 22 | சனி | சப்10-15 | புன27-13 | சித்60 | |
| 7 | 23 | ஞா | அஷ்12-13 | பூச30-10 | சித்60 | |
| 8 | 24 | திங் | நவ12-18 | ஆயி31-13 | சி31-13மர | |
| 9 | 25 | செவ் | தச10-28 | மகம்30-18 | சித்60 | |
| 10 | 26 | புத | ஏகா6-33 | பூரம்27-28 | அமி60 | |
| 11 | 27 | வியா | து1-3<br>திர53-33 | உத்22-53 | மர22-53சி | |
| 12 | 28 | வெ | சது45-3 | அஸ்17-0 | அ17-0சி | தீபாவளி பண்டிகை |
| 13 | 29 | சனி | அ●35-53 | சித்10-5 | மர10-5அ | சர்வத்திர அமாவாசை,<br>கேதாரிகௌரி விரதம் |
| 14 | 30 | ஞா | பிர26-13 | சுவா2-30<br>விசா54-50 | சித்2-30மர | கார்த்தீகசுத்தம், சந்திர தரி<br>சனம்,பலிபூஜா,அவமாகம் |
| 15 | 31 | திங் | துதி16-50 | அனு47-38 | சித்60 | இயமத் துதியா |
| 16 | 1 | செவ் | திரி7-58 | கே41-23 | ம41-23அ | ஆலோசன கௌரி விரதம் |
| 17 | 2 | புதன் | சது0-5<br>பஞ்53-45 | மூல36-23 | ம36-23அ | அவமாகம்<br>[ரம் |
| 18 | 3 | வியா | சஷ்49-3 | பூரா32-50 | சித்60 | கந்தர் சஷ்டி, சூரசம்ஹா |
| 19 | 4 | வெள் | சப்46-23 | உத்31-15 | சி31-15மர | சுபமுகூர்த்தம் செய்ய |
| 20 | 5 | சனி | அஷ்45-33 | திரு31-35 | சித்60 | விசாக கார்த்திகை நா-23- |
| 21 | 6 | ஞா | நவ46-38 | அவி33-45 | ம33-45சி | அக்ஷய நவமி [28. |
| 22 | 7 | திங் | தச49-25 | சத37-33 | சி37-33மர | கிரகபிரவேசம் |
| 23 | 8 | செவ் | ஏகா53-30 | பூர42-45 | ம42-45அ | சர்வ, மத்வ ஏகாதசி |
| 24 | 9 | புத | து58-40 | உத்48-55 | சி48-55மர | யோகீஸ்வர துவாதசி |
| 25 | 10 | வியா | திர60 | ரே55-48 | சி55-48அ | பிரதோஷம் [ரம்பம் |
| 26 | 11 | வெள் | திர4-30 | அஸ்60 | அமி60 | திருதினஸ்பிருக், வித்யா |
| 27 | 12 | சனி | ச○10-40 | அஸ்3-3 | சித்60 | பௌர்ணமி, அன்னபிஷே |
| 28 | 13 | ஞா | பவு16-58 | பர10-30 | சித்60 | கிருத்திகை [கம் |
| 29 | 14 | திங் | பிர23-5 | கிரு17-50 | ம17-50அ | 10-க்குள் மழை |
| 30 | 15 | செவ் | துதி29-8 | ரோ25-0 | அ25-0சித் | விருச்சிகரவி நா-19-18 |

1932௵ நவம்பர்௴

| | | | |
|---|---|---|---|
| | | | |
| ராகு | 11-கன்-சுக்<br>12-விரு-புத<br>14-சிம்-செவ் | | செவ் |
| சனி | | | சுக்<br>குரு<br>கே |
| | | சூரி<br>புத | |

PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.